# மூவர் தமிழ் வாசகம்

## மூன்றும் படிவம்—இரண்டாம் பிரிவு

[சிறப்புப் பகுதி]


ஆசிரியர்கள் :

வித்துவான் கோ. வில்வபதி

வித்துவான் எம். எஸ். வேங்கடாச்சாரி

டி. ஆர். ஸ்ரீநிவாசன், பி.ஏ., பி.டி. (தமிழ்)

இந்து தியலாஜிகல் உயர்நிலைப்பள்ளி, சென்னை.



வர்தா பதிப்புக் கழகம்

திருவல்லிக்கேணி :: சென்னை

[விலை ரூ. 0-14-0

முதற் பதிப்பு—நவம்பர், 1954
மறு பதிப்பு (2) 1956

APPROVED FOR CLASS USE
BY THE MADRAS TEXT-BOOK COMMITTEE
[Fort St. George Gazette dated 4-5-1955
Supplement to Part I-B Page 25]






Kabeer Printing Works, Madras (3284)

# முகவுரை

'மூவர் தமிழ் வாசகம்' என்னும் இந்நூல் வரிசை அண்மையில் (25-6-51-இல்) அரசியலார் வெளியிட்ட பாடத்திட்ட முறைக்கு ஏற்ப எழுதப் பெற்றதாகும்.

பாடத் திட்டப்படி முதல் மூன்று படிவங்களுக்குத் தாய் மொழிக் கல்விமுறை பொதுப்பகுதி என்றும், சிறப்புப் பகுதி என்றும் இரண்டு பிரிவுகளாக அமைக்கப்பட்டுள்ளது. இரண்டு பகுதிகளிலும் அமையவேண்டிய பாடங்களின் இயல்புகளும், செய்யுட்களின் வகைகளும் தரப்பட்டுள்ளன. இரண்டாம் பகுதி முதற் பகுதியை விடச் சிறிது உயர்ந்த நடையுடையதாய் மாணவர்க்குத் தமிழ்ச்சுவை ஊட்டக் கூடியதாய் இருத்தல் வேண்டும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது. அம்முறையை நன்கு உளங்கொண்டு இவ்வாசக வரிசை எழுதப் பெற்றுள்ளது.

இந்நூல் மூன்றும் படிவ மாணவர்க்குரிய சிறப்புப்பகுதி நூலாகும். இதில் உரைநடையும் செய்யுளும் மாணவர் விரும்பிக் கற்குமாறு எளிய இனிய தமிழ் நடையில் அமைக்கப் பட்டுள்ளன. உரைநடையில் அரசாங்கத்தார் குறிப்பிட்ட அளவுக்கு அதிகமாகச் சில பாடங்கள் அமைந்துள்ளன. செய்யுட் பகுதியில் சில வரிகள் அதிகமாகத் தரப்பட்டுள்ளன. ஆசிரியர் தம் விருப்பத்திற்கு ஏற்றவாறு பாடல்களைத் தேர்ந் தெடுத்துக் கொள்வதற்கு இம்முறை உதவியாக இருக்கும்.

ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் அருஞ்சொல் விளக்கம், பயிற்சி வினாக்கள் முதலியன தரப்பட்டுள்ளன. ஆங்கில முறையை யொட்டிச் சிறந்த மொழிப் பயிற்சிகளும், கட்டுரைப் பயிற்சிகளும் அமைக்கப்பட்டுள்ளன. அரசாங்கத்தாரின் பாடத்

திட்ட முறைக்கு ஏற்ப ஒவ்வொரு பாடத்திலும் சிறந்த இலக்கணப் பயிற்சிகள் தரப்பட்டுள்ளன. உரைநடைப் பாடத்தைக் கற்பிக்கும் போதே இலக்கணப் பகுதியையும் தொடர்பு படுத்திக் கற்பிப்பது சிறந்த நன்மையளிக்கும். மாணவர்கள் இப்பயிற்சிகளைச் செய்து பழகுவதால் அவர் களுடைய தமிழறிவு வளர்ச்சி பெறும்.

செய்யுட் பகுதியிலும் ஆசிரியர் குறிப்பு, அருஞ்சொல் விளக்கம், வினாக்கள், பலவிதமான மொழிப் பயிற்சிகள் ஆகியன அளிக்கப்பட்டுள்ளன. இவை தமிழ்ச் செய்யுட்களைக் கற்பதில் மாணவர்க்கு ஆர்வம் ஊட்டும் என்று கருதுகிறோம்.

இந்நூல் மாணவர்க்குப் பெரும்பயன் விளைக்கும் என்பது எங்கள் எண்ணம். அறிஞர்கள் இந்நூலை ஆதரித்து மேலும் எங்கட்கு இத்துறையில் ஊக்கமளிக்குமாறு வேண்டுகிறோம்.

ஆசிரியர்கள்

# எங்கள் நன்றி

கீழே தரப்பட்டுள்ள பாடல்களை இந்நூலில் வெளியிட அருள்கூர்ந்து இசைவு தந்த அறிஞர்கள் அனைவர்க்கும் எம் வணக்கமும் நன்றியும் உரியன.

1. கடவுள் வணக்கம்—(16 வரிகள்) பாரதியார்.
   சென்னை அரசாங்கக் கல்வி இலாகா.

2. முப்பெரும் இலக்கியங்கள்; நினைவும் முடிவும்—(16 வரிகள்)
   கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையவர்கள்: உரிமை:
   திரு. குமாரசாமிப் பிள்ளை, புத்தேரி.

—பதிப்பாளர்

# பொருளடக்கம்

# மூவர் தமிழ் வாசகம்

## மூன்றும் படிவம்—சிறப்பு



## உரைநடைப் பகுதி

### 1. அயல் நாட்டுத் தமிழ்த் தொண்டர்

உலகில் சிறந்த நாகரிகம் பெற்ற மொழிகளில் நம் தாய் மொழியாகிய தமிழ் மொழியும் ஒன்றாகும். தமிழ் இனிமையான மொழி; இலக்கிய இலக்கண வளம் நிறைந்த மொழி. தமிழ் மொழியின் இனிமைக்கும் வளத்துக்கும் அம்மொழியில் அமைந்துள்ள நூல்களே காரணமாகும். தமிழ் மொழியில் உள்ள தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்களும், சங்க இலக்கியங்களும், உலகப் பொது மறையாகிய திருக்குறளும், நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரமும், திருத்தகு சிந்தாமணியும், கம்பன் கவியமுதமும் தமிழ் மொழிக்கு உலகம் போற்றும் பெருமையை அளித்துள்ளன. தமிழின் இனிமையும் இலக்கியச் சிறப்பும் தமிழர்களை மட்டுமன்றித் தமிழ் தெரியாத அயல் நாட்டினரையும் கவர்ந்துள்ளன. அயல் நாட்டறிஞர் பலர் தமிழ் கற்றுத் தமிழில் பெரும் புலவர்களாய் விளங்கியதோடமையாமல் தமிழ் வளர்ச்சிக்கு நிலையான பல தொண்டுகளும் புரிந்துள்ளனர். அவர்களுள் வீரமாமுனிவர், ஜி. யூ. போப்பையர், கால்டுவெல் ஐயர் ஆகிய பேரறிஞர்கள் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவர்களாவர்.

#### 1. வீரமாமுனிவர்

வீரமாமுனிவர் இத்தாலி நாட்டைச் சார்ந்த **காண்டிகிலியோன்** என்னும் ஊரில் கி. பி. 1680-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்களில் ஒரு செல்வக் குடும்பத்தில் பிறந்

தார். அவருடைய இயற்பெயர் **கான்ஸ்டன்டைன் ஜோசப் பெஸ்கி** (Constantine Joseph Beschi) என்பதாகும். அவர் கத்தோலிக்கக் கிறித்தவ மதத்தைச் சார்ந்தவர். ஏசுநாதரின் தியாகவாழ்க்கையும் உயர்ந்த கொள்கைகளும் அவர் மனத்தை மிகவும் கவர்ந்தன. ஆதலால் அவர் கிறித்தவ மதத்தை உலகம் முழுவதும் பரப்பும் தொண்டில் ஈடுபட விரும்பி இளமையிலேயே கிறித்தவப் பாதிரியாரானுர். கிறித்தவ மதத்தின் தலைவராகிய போப்பாண்டவர் அவருடைய அறிவு ஆற்றல்களை உணர்ந்து தமிழ் நாட்டில் கிறித்தவ மதத்தைப் பரப்பும் துறையில் பணியாற்றுமாறு அவரைக் கி. பி. 1708-ஆம் ஆண்டில் இந்தியாவிற்கு அனுப்பி வைத்தார். அதன்படி பெஸ்கியார் தமிழ்நாடு வந்து திருநெல்வேலி மாவட்டத்தில் சமயப்பணி புரியத் தொடங்கினுர்.

தமிழ் நாட்டில் கிறித்தவ மதத்தைப் பரப்ப வேண்டுமானுல் அம்மத உண்மைகளைத் தமிழ்மொழியில் எடுத்துக் கூறினுல்தான் பயன் விளையும் என்று உணர்ந்த பெஸ்கியார் அதற்காகத் தமிழ் கற்கத் தொடங்கினுர். அவர் இளமையிலேயே தம் தாய் மொழியுடன் ஆங்கிலம், இலத்தீன், கிரீக், போர்த்துகீசு முதலிய பல மொழிகளைக் கற்றுத் தேர்ச்சி பெற்றிருந்தார். பலமொழிப் பயிற்சி உடையவர்க்கு மற்ருெரு மொழியைக் கற்றுக்கொள்வது எளிதாகும். மேலும் தமிழ்மொழி, கற்பதற்கு மிகவும் எளிய மொழியாதலால் பெஸ்கியார் விரைவில் தமிழில் பிழையின்றி நன்ருக எழுதவும் பேசவும் கற்றுக்கொண்டார். அவர் அவ்வளவோடு அமைய விரும்பாமல் தமிழில் உள்ள சிறந்த இலக்கிய இலக்கணங்களை ஐயமறக் கற்று அவற்றின் சுவையை முற்றிலும் உணர அவாக்கொண்டார். அதனுல் அக்காலத்தில் பெரும் புலவராகத் திகழ்ந்த **சுப்பிரதீபக் கவிராயரிடம்** முறையாகத் தமிழ் நூல்களை ஓதி உணர்ந்தார்; ஐந்தே ஆண்டுகளில் அரிய தமிழ்ப் புலமையும் கவிபாடும் திறமையும் வாய்க்கப்பெற்ருர். அவருடைய நுண்ணறிவும் பெருமுயற்சியும் பாராட்டற்குரியன அன்ருே?

அயல் நாட்டவரான அவர் தமிழ் கற்றவுடன் தமிழ் நாட்டவரானுர் ; தமிழ் நாட்டவரின் பழக்க வழக்கங்களே மேற்கொண்டார் ; தமிழ் நாட்டுத் துறவிகளேப் போலவே காவி யாடை அணிந்தார் ; கையில் யோக தண்டம் கொண்டார் ; காலில் பாதக்குறடு தரித்தார் ; காதுகளில் கடுக்கன் அணிந் தார் ; எங்குச் சென்ருலும் புலித் தோலே விரித்து அதன்மேல் அமரும் பழக்கத்தை மேற் கொண்டார். அவர் சிவிகை யூர்ந்தே எங்கும் செல்வார். அவர் செல்லும்போதும் வீற் றிருக்கும்போதும் அன்பர்கள் இருபுறமும் சாமரம் வீசுவர். இங்ஙனம் அவர் நடை உடைகளே மட்டுமல்லாமல் உணவையும் மாற்றியமைத் துக் கொண்டார் ; புலால் உணவை அறவே ஒழித்துப் புலால் ஒழிந்த நல்லுணவை ஒரு வேளேயே உண்ணும் பழக்கத்தை மேற்கொண்டார். அவருடைய அத்தகைய துணிவைப்பாராட்டி மக்கள் அவரைத் தைரியநாத சுவாமி எனப் போற்றினர். அப்பெயரே வீரமாமுனிவர் என்னும் தூய தமிழ்ப் பெயராய், அவர் புகழை விளக்கும் நிலேத்த நற்பெயராய் வழங்கலாயிற்று.



வீரமா முனிவர்

வீரமாமுனிவர் சமயத்தொண்டு புரிந்ததுடன் தமிழ ராகிய நாம் என்றும் நன்றி பாராட்டத் தக்க வகையில் அரும்பெரும் தமிழ்த் தொண்டும் புரிந்துள்ளார். தமிழில் செய்யுள் நூல்களே இருந்தன. எக்கருத்தையும் செய்யுள் வடிவில் எழுதும் பழக்கமே இருந்தது. அதனுல் தமிழை நன்கு கற்றவரே அந்நூல்களின் சுவையை உணர்ந்து இன்புற முடியும். கற்றவரே யன்றி மற்றவரும் தமிழின் சுவையை உணர்ந்து இன்புற வேண்டுமானுல் தமிழில் உரை நடை நூல்கள் தோன்றுதல் வேண்டும் என்று உணர்ந்தார் வீரமாமுனிவர். அதனுல் அவர் எளிய இனிய

தமிழ் உரைநடையில் '**பரமார்த்த குரு கதை**' என்னும் நூலை எழுதி வெளியிட்டார். அந்நூல் நகைச் சுவை மிக்கதாக விளங்குவதால் அதனைப் பாமரரும் விரும்பிப் படித்தனர்; நகைச் சுவையோடு தமிழ்ச் சுவையையும் பருகி இன்புற்றனர். மற்றும் வீரமாமுனிவர் 'வேதியர் ஒழுக்கம்,' 'வேதவிளக்கம்,' 'வாமன்கதை' போன்ற கிறித்தவ சமய சம்பந்தமான பல உரைநடை நூல்களையும் எழுதியுள்ளார். அவர் முறையைப் பின்பற்றிப் பின்னர்த் தமிழில் உரைநடை நூல்கள் பல வெளிவரலாயின. இன்று எக்கருத்தையும் அழகிய தமிழ் உரைநடையில் எழுதும் வழக்கம் மலிந்துள்ளது. இதற்கு வழிகாட்டியாக விளங்கிய வீரமாமுனிவரைத் '**தமிழ்உரை நடையின் தந்தை**' என்று தமிழ்நாடு போற்றக் கடமைப்பட்டுள்ளதன்றோ?

பண்டைக் காலத்தில் தமிழில் அகராதி இல்லை; பிங்கலம், திவாகரம், சூடாமணி என்னும் நிகண்டுகளே இருந்தன. அந்நூல்கள் ஒவ்வொரு தமிழ்ச் சொல்லுக்கும் இன்ன பொருள் என்பதைச் செய்யுள் வடிவிலேயே கூறுவனவாகும். அவற்றை மனப்பாடம் செய்தவரே தமிழில் புலமை பெற முடியும். அதனால் தமிழ் வளர்ச்சிக்கு ஆங்கில முறையை ஒட்டிய அகராதி ஒன்று இன்றியமையாதது என்று கண்டார் வீரமாமுனிவர். அவர் அரும்பாடுபட்டுத் தமிழ்ச் சொற்களை அகர வரிசைப்படுத்தி அவற்றிற்குப் பொருள் கூறும் அகராதி ஒன்றினைத் தொகுத்து வெளியிட்டார். அவர் வெளியிட்ட அகராதிக்குச் **சதுர் அகராதி** என்பது பெயர். அந்த அகராதியே இன்று தமிழில் உள்ள சிறியனவும் பெரியனவுமாகிய பற்பல அகராதிகட்கும் அடிப்படையாகும்.

மற்றும் வீரமாமுனிவர் ஆங்கில முறையையொட்டித் தமிழில் நிறுத்தக் குறிகளை அமைத்து எழுதும் பழக்கத்தையும் புகுத்தினர். அதனால் உரைநடை நூல்களைப் படிக்கும்போது கேட்பவர் தெளிவாகப் பொருளை உணர்ந்து இன்புற முடிகின்றதன்றோ? தமிழில் சில எழுத்துக்களின் வரிவடிவ அமைப்புக்களையும் அவர் மாற்றினர். எ, ஒ என்னும் குற்றெழுத்துக்களை மேலே

புள்ளியிட்டு எழுதுவதும், ஏ, ஓ என்னும் நெட்டெழுத்துக்களை எ, ஒ எனப் புள்ளியின்றி எழுதுவதும் முன்பிருந்த வழக்கமாம். அதனால் எழுதுவோர்க்கும், படிப்போர்க்கும் பலப்பல துன்பங்கள் உண்டாயின. அவற்றின் உருவங்களைத் தற்போதுள்ள முறைப்படி மாற்றி அத்துன்பங்களை அகற்றியவர் வீரமாமுனிவரேயாவர்.

வீரமாமுனிவர் தமிழில் இயற்றிய செய்யுள் நூல்கள் பல. அவற்றுள் சிறந்தது தேம்பாவணி ஆகும். தேம்பாவணி என்பதற்கு வாடாத மாலை என்பது பொருள். பொருளுக்கேற்ப அந்நூல் தமிழ்த்தாயின் திருமார்பில் வாடாத மணமாலையாகப் பொலியும் மாண்புடையதாகவே விளங்குகின்றது. தேம்பாவணி ஏசுநாதரின் தந்தையாகிய சூசையப்பர் வரலாற்றை விரித்துரைக்கும் ஒப்பற்ற காவியமாகும். அந்நூலில் சிந்தாமணியின் செய்யுள் நடையும், கம்பரின் கவிச் சுவையும் கற்பனை நலமும் கனிகின்றன. இடையிடையே திருக்குறள் என்னும் தெய்வத் திருமறையின் கருத்துவளம் கவின் செய்கின்றது. இந்தக் காவியமொன்றே வீரமாமுனிவரின் ஒப்பற்ற தமிழ்ப் புலமைக்கும் கவித்திறமைக்கும் சான்றாகத் திகழ்கின்றது.

தமிழில் உள்ள நூல்களில் தலைசிறந்ததாக விளங்கும் திருக்குறளில் கூறப்படும் ஒப்புயர்வற்ற நீதிகளும், கவி நயமும் வீரமாமுனிவரின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. எனவே அவர் திருக்குறளை இலத்தீன் மொழியில் மொழி பெயர்க்கலானார். அம்மொழி பெயர்ப்பே மேனாட்டார் திருக்குறளின் பெருமையையும் அதன்மூலம் தமிழின் சிறப்பினையும் அறிந்துகொள்ளப் பேருதவி புரிந்தது. அதனையொட்டியே மேனாட்டார் தங்கள் தங்கள் தாய் மொழிகளில் குறளை மொழி பெயர்த்தனர். எனவே, தமிழின் உயர்வுக்கு மட்டுமின்றித் தமிழ்நாட்டின் உயர்வுக்கும் காரணமாக வீரமாமுனிவர் விளங்கினர் என்னலாம்.

மேலும் அவர் அயல் நாட்டவரும் தமிழை எளிதில் கற்கத் துணைபுரியும் **தொன்னூல் விளக்கம்** என்னும்

இலக்கண நூலையும் இயற்றியுள்ளார். தொன்னூல் விளக்கம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்திலக்கணங்களையும் மிகத் தெளிவாக விளக்குகிறது. அந்நூலால் அவருக்கிருந்த இலக்கணப் புலமை இனிது விளங்கும். ஐந்தாண்டளவே தமிழ் கற்ற ஓர் அயல் நாட்டார் தமிழுக்கு இலக்கணம் வகுக்கும் அளவுக்குப் பெரும் புலமை பெற்றது வியத்தற்குரியதன்றோ?

இங்ஙனம் தமிழ்த் தொண்டாற்றிய வீரமாமுனிவர் சமயத் தொண்டும் சிறப்பாகப் புரிந்தார். அவர் முயற்சியால் திருநெல்வேலி மாவட்டம் தென்னாட்டில் கிறித்தவ சமயத்திற்கே நிலைக்களமாக விளங்கியது. அவர் வாழ்ந்து தொண்டு செய்த வடக்கன் குளம், காமநாயகன் பட்டி என்னும் ஊர்கள் இன்றும் கிறித்தவ சமயத்தின் ஊற்றிடங்களாகப் பொலிகின்றன. கொள்ளிட நதிக் கரையில் ஏலாக்குறிச்சி என்னும் ஊரில் மரியம்மையின் கோயில் ஒன்றைக் கட்டினார். அக்கோயிலுக்கு அடைக்கல மாதா கோயில் எனப் பெயரிட்டனர். அவ்வூரைத் திருக்காவலூர் என வழங்கினர். அவ்வூரைப்பற்றித் **திருக்காவலூர்க் கலம்பகம்** என்னும் இனிய நூலையும் பாடினார். அக்கோயில் இன்றும் அவர் நினைவுச் சின்னமாக விளங்குகின்றது. அவர் செய்த சமயத் தொண்டினும் தமிழ்த் தொண்டே மிகுந்திருந்தது என்று கூறலாம். தமிழ்த் தொண்டாலேயே அவர் என்றும் அழியாப் புகழ் பெற்றார். தமிழ்நாடு உள்ள வரையிலும் அவரைத் தமிழர்கள் மறக்கமாட்டார்கள் என்பது உறுதி. இங்ஙனம் நிலைத்த புகழுக்கு உரியவராக விளங்கிய வீரமாமுனிவர் 1742-ஆம் ஆண்டில் **அம்பலக்காடு** என்னும் இடத்தில் இவ்வுலக வாழ்வை நீத்துப் புகழுடம்பு எய்தினர்.

## 2. போப்பையர்

வீரமாமுனிவருக்குப் பிறகு தமிழ் நாட்டிற்கு வந்து தமிழ்த் தொண்டாற்றிய அறிஞர்களில் ஜி. யூ. போப் என்ற பாதிரியார் சிறந்தவராவர். போப் ஆங்கிலேயர்;

கி. பி. 1820-ஆம் ஆண்டில் பிறந்தவர். அவரும் வீரமா முனிவரைப் போலச் சமயப்பணி புரிய 1839-ஆம் ஆண்டில் தமிழ் நாட்டிற்கு வந்தார் ; திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள சாயர்புரம் என்னும் ஊரில் இருந்து சமயப்பணி புரியலானார். அவர் சாயர்புரத்தில் ஒரு சமயப் பள்ளியைத் தொடங்கி மாணவர்கட்குச் சமயக் கல்வி போதிக்கலானார். அவருடைய பெரு முயற்சியால் அப்பள்ளி உயர் நிலையுற்றது. அப்பள்ளியில் தமிழ், இலத்தீன், கிரீக்கு, ஈபுரு போன்ற பல மொழிகளும், கணிதம், தர்க்கம்போன்ற கலைகளும் கற்பிக்கப்பட்டன. அதனால் அவர் புகழ் எங்கும் பரவலாயிற்று. அவர் அன்று தொடங்கிய பள்ளியே இன்றும் பெரிய உயர்நிலைப் பள்ளியாய் அவர் நினைவுச் சின்னமாக விளங்கிக் கொண்டிருக்கிறது. கல்வித்துறையில் மட்டுமன்றிச் சமயப் பிரசாரத் துறையிலும் அவர் ஈடுபட்டுப் பெருந் தொண்டாற்றினார். அவருடைய பேருழைப்பால் தமிழ்நாட்டில் கிறித்தவ சமயம் கால் கொள்ளத் தொடங்கியது. இடையில் போப்பையர் இங்கிலாந்து சென்று இரண்டாண்டுகள் தங்கி, மீண்டும் தமிழ் நாட்டிற்கு வந்தார்.


ஜி. யூ. போப்

இரண்டாம் முறை அவர் தமிழ்நாடு அடைந்தபோது அவர் தஞ்சையிலும், உதகமண்டலத்திலும், பங்களூரிலும் வாழ்ந்து சேவை செய்தார். உதகையில் அவர் ஒரு பள்ளியைத் தொடங்கி நடத்தினார். பங்களூரில் வாழ்ந்தபோது பிஷப் காட்டன் பள்ளியின் தலைவராய் அப்பள்ளியின் வளர்ச்சிக்காக அரும்பாடு பட்டார். பின்னர் அவர் இங்கிலாந்து சென்று ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராக இருபதாண்டுகட்கு மேல் பணியாற்றினார். அவர் தஞ்சையில் வாழ்ந்தபோது சிறந்த தமிழாசிரியர் பலரைக் கொண்டு தமிழை ஐயம் திரிபறக்

கற்றுத் தேர்ந்தார். தமிழில் உள்ள நீதிநூல்கள் அவர் மனத்தை மிகவும் கவர்ந்தன. ஆத்திசூடி முதல் திருக்குறள் ஈருகப் படிப்படியாக நீதிகளைப் போதிக்கும் அந் நூல்களின் அமைப்பைக் கண்டு போப்பையர் மிகவும் வியந்தார். அவற்றுள்ளும் திருக்குறளே அவர் மனத்தை முற்றும் கவர்ந்த நூல் எனலாம்.

திருக்குறளில் அவர் ஏசுநாதரின் சீரிய கொள்கை களைக் கண்டார். ஏசுநாதர் சிலுவையில் அறையுண்டு வருந்தியபோது, 'ஐயோ! இவர்கள் அறியாமையினுல் பாவம் செய்கின்ருர்கள்; ஆண்டவனே, இவர்களை மன் னிப்பாயாக,' என்று வேண்டினுரன்ருே? இங்ஙனம் இன்ன செய்தார்க்கும் இனியவே செய்யவேண்டும் என் பதனை 'இன்ன செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால், என்ன பயத்ததோ சால்பு'; 'இன்ன செய்தாரை ஒறுத்தல் அவர் நாண, நன்னயம் செய்து விடல்' என்று வள்ளுவர் கூறியுள்ளார். அதனுல் அவர் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் பணியாற்றியபோது திருக்குறளைச் சிறந்த முறையில் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளி யிட்டார். அவருக்கு முன்னும் அறிஞர் பலர் திருக்குறளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளனர். எனினும், அவர்கள் முழுதும் மொழி பெயர்க்கவில்லை யாதலால் போப்பையர் மொழிபெயர்ப்பே சிறந்து விளங்கலாயிற்று. மற்றும் நாலடியார், திருவாசகம் என்னும் சிறந்த நூல் களையும் அவர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். திரு வாசகம் சைவ சமய நூல்; 'திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார்' எனப் போற்றிப் புகழப் பட்ட நூல். அதனுலேயே கிறித்தவராகிய போப்பையர் அதனை விரும்பிக் கற்ருர். தாம் கற்றதோடு அமையாது மேனுட்டார் அனைவரும் கற்றுப் பயனடைய வேண்டும் என்று அதனை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். அவரு டைய இச்சிறந்த தொண்டினுலேயே அந்நூல்களின் பெரு மையை மேனுட்டார் அனைவரும் உணர்ந்து போற்றும் வாய்ப்பு ஏற்பட்டது. இவற்றைத் தவிர அவர் தமிழிலேயே பல நூல்களை எழுதியுள்ளார்; மாணவர்க்கு ஏற்ற தமிழ்

இலக்கண நூல் ஒன்றும், வரலாற்று நூல் ஒன்றும் எழுதி வெளியிட்டார்.

இங்ஙனம் ஆங்கிலேயராகப் பிறந்தும் தமிழுக்கு அருந் தொண்டாற்றிய போப்பையரின் புலமைத் திறத்தை வியந்தும், அவர் தமிழ்த் தொண்டைப் பாராட்டியும் ராயல் ஏஷியாடிக் சங்கத்தார் விக்டோரியா மகா ராணியின் வயிர விழா நினைவுப் பரிசாகிய தங்கப் பதக்கத்தினை அவர்க்கு வழங்கிச் சிறப்பித்தனர். அப்பரிசு பெற்ற அடுத்த ஆண்டிலேயே—அஃதாவது 1908-ஆம் ஆண்டில் போப்பையர் இவ்வுலக வாழ்வை நீத்தார். உயிர் நீங்குமுன் அவர், "எனது கல்லறையில், 'நான் ஒரு தமிழ் மாணவன்,' என்று எழுதி வையுங்கள்," என்று கூறினராம். என்னே அவரது தமிழ்ப் பற்று! அவர் அயல் நாட்டவராயினும் அவருடைய அளவிறந்த தமிழ்ப் பற்றையும், அவர் ஆற்றிய ஒப்புயர்வற்ற தமிழ்த் தொண்டையும் கருதினுல் அவர் தமிழ்த் தாயின் நன்மக்களில் ஒருவராகப் போற்றத் தக்கவர் ஆவார் என்பது உறுதியேயாகும்.

## 3. கால்டுவெல்

போப்பையர் வாழ்ந்த காலத்திலேயே வாழ்ந்த மற்ருெரு பெரியார் கால்டுவெல் என்பவராவார். அவர் அயர்லாந்து நாட்டில் 1814-ஆம் ஆண்டில் பிறந்தவர்; இளமையிலே கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கினுர்; கிளாஸ்கோ பல்கலைக்கழகத்தில் கல்வி கற்றுப் பட்டம் பெற்ருர். அவரும் 1838-ஆம் ஆண்டில் தமிழ் நாட்டில் சேவை செய்யச் சமயத் தொண்டராக வந்து சேர்ந்தார். அவர் சென்னையில் வந்திறங்கி அங்கு மூன்ருண்டுவரை வசித்து வந்தார்; அப்போது சென்னையில் புகழுடன் வாழ்ந்த துரு


கால்டுவெல்

என்னும் ஆங்கிலேயரிடம் தங்கியிருந்தார். அவர் தமிழில் புலமையுடையவராதலால் அவரிடம் மூன்ருண்டிற்குள் தமிழை முறையாகக் கற்றுத் தேர்ந்தார். பின்னர் அவர் திருநெல்வேலியில் உள்ள இடையன்குடி என்னும் ஊரில் தங்கிச் சமயத் தொண்டு செய்யப் புறப்பட்டார். அவர் சென்னையிலிருந்து இடையன்குடி வரையுள்ள நானூறு கல் தொலைவையும் காலால் நடந்தே கடந்தார். அவர் செய்த அப்பிரயாணத்தின் மூலம் ஆங்காங்கு வாழும் தமிழ் மக்களின் பழக்க வழக்கங்களையும், அவர்களது நிலையையும் நன்கு உணர்ந்துகொள்ள வாய்ப்பு ஏற்பட்டது.

இடையன்குடி எத்தகைய வசதியும் இல்லாத ஒரு சிற்றூர். கால்டுவெல் அங்குச் சென்றவுடன் முதலாவதாக அவ்வூரைச் சீர்திருத்தும் பணியில் ஈடுபட்டார். பின்னர் அங்கு அவர் ஒரு சிறந்த கோயிலையும் கட்டினர். இன்றும் அக்கோயில் அவருடைய புகழின் திருவுருவமாக விளங்குகிறது.

கால்டுவெல் ஐம்பத்து மூன்று ஆண்டுகள் தமிழ் நாட்டில் வாழ்ந்து சமயப்பணி புரிந்ததுடன் தமிழ்ப் பணியும் புரிந்து வந்தார். அவர் செய்த தமிழ்த் தொண்டில் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது அவர் எழுதிய **ஒப்பிலக்கண நூ**லேயாகும். அவர் தமிழ் நாட்டிற்கு வந்து தமிழைக் கற்றதுடன் தமிழோடு தொடர்புடைய தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு ஆகிய மொழிகளையும் சம்ஸ்கிருதத்தையும் பற்றிய உண்மைகளையும் நன்கு உணர்ந்தார். அவற்றின் துணைகொண்டு அவர் ஒப்பிலக்கண நூலை ஆங்கிலத்தில் எழுதினர். அந்நூலில் தமிழ்மொழி மிக்க பழமையான மொழி என்றும், நாகரிகம் பெற்ற செம்மொழி என்றும், எத்தகைய கருத்துக்களையும் வருத்தமின்றித் தெரிவிக்குமாறு சொல்வளம் படைத்த நன்மொழி என்றும், தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு ஆகிய மொழிகள் யாவும் ஒரே குடும்பத்தைச் சார்ந்த திராவிட மொழிகளே என்றும் விளக்கியுள்ளார். அவர் புரிந்த அந்த ஆராய்ச்சியினல் தமிழின்

பெருமையை அனைவரும் அறிந்துகொள்ள முடிந்தது. அவருடைய பேரறிவைக் கண்டு கிளாஸ்கோப் பல்கலைக் கழகத்தார் அவருக்கு 'டாக்டர்' பட்டம் வழங்கிப் பெருமைப் படுத்தினர். மற்றும் அவர் 'தாமரைத் தடாகம்' 'நற்கருணை' என்பன போன்ற தமிழ் நூல்களையும் இயற்றினுர்; திருநெல்வேலிச் சரித்திரத்தை முறையாக எழுதி வெளியிட்டார்.

இங்ஙனம் புகழ்பெற்று வாழ்ந்த கால்டுவெல் இடையிடையே இங்கிலாந்து சென்று வந்தார். இறுதி முறையாக அவர் இங்கிலாந்து சென்றபோது அவருடைய முதுமையைக் கருதி அன்பர்கள் அவரை அங்கேயே தங்கி விடுமாறு வேண்டினர். அப்போது அவர், "நான் என் வாழ்நாளில் பெரும் பகுதியை இந்திய நாட்டில் கழித்தேன்; இந்தியர்களுக்காகவே வாழ்ந்தேன். இனியும் நான் அங்கேயே வாழ்ந்து அவர்களுக்காகவே உழைத்து அங்கேயே உயிர் துறக்க விரும்புகிறேன்," என்று கூறினுர். அவருக்கு நம் நாட்டின்மீது இருந்த பற்றினை என்னெனப் போற்றுவது!

கால்டுவெல் ஐயர் அங்ஙனமே இந்தியா மீண்டார்; தம் முதுமையில் கோடைக்கானலில் தங்கி வாழ்ந்து வந்தார். அவர் தம் எழுபத்தேழாம் வயதில் இவ்வுலக வாழ்வைத் துறந்தார். அவர் பொன்னுடல் இடையன்குடிக்குக் கொண்டு செல்லப்பெற்று அவரால் கட்டப்பட்ட கோயிலில் அடக்கம் செய்யப்பட்டது.

இங்ஙனம் எண்ணற்ற அயல் நாட்டவர் தமிழ் மொழியின் வளர்ச்சிக்கு அருந்தொண்டாற்றியுள்ளனர். அவர்கள் முயற்சியால் நம் அருமைத் தமிழ்மொழி பல துறைகளிலும் வளர்ந்து உலகப் புகழ்பெற்ற நன்மொழியாகத் திகழ்கிறது. ஆகையினுல் தமிழர்கள் அவர்கட்கு என்றும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளனரன்றே!

## அருஞ்சொல் விளக்கம்

திருத்தகு - மேன்மை பொருந்திய ; ஐயமற - குற்றமின்றி ; யோக தண்டம் - யோகப் பயிற்சி செய்யத் துறவிகள் கொண்டுள்ள கோல் ; சிவிகை - பல்லக்கு ; அறவே - முற்றிலும் ; புலால் - மாமிசம் ; பாமரர் - கல்வியறிவற்றவர் ; மலிந்து - மிகுந்து ; அகராதி - அ முதல் வரிசைப்படி எல்லா எழுத்துக்களிலும் தொடங்கும் சொற்களின் பொருளை அறி விக்கும் நூல் ; திரிபு - மயக்கம் ; ஈருக - இறுதியாக ; பயத்தது - பய னுடையது ; ஒறுத்தல் - தண்டித்தல் ; அமையாது - அமைதியடையாமல்; சால்பு - நல்லொழுக்கம்.

## வினாக்கள்

1. அயல் நாட்டினரும் தமிழை விரும்பிக் கற்கக் காரணம் என்ன ?

2. வீரமாமுனிவரின் இயற்பெயர் யாது ? அவர் 'வீரமாமுனிவர் என்று வழங்கப்பட்டதேன் ?

3. வீரமாமுனிவர் 'தமிழ் உரை நடையின் தந்தை' எனப் போற் றப்படுவதேன் ? அவர் இயற்றிய நூல்கள் எவை ?

4. சதுரகராதி, தேம்பாவணி—குறிப்பு வரைக.

5. வீரமாமுனிவர் தமிழ் எழுத்துக்களில் புரிந்த சீர்திருத்தம் யாது ?

6. வீரமாமுனிவர் தம் சமயத்துக்கெனப் புரிந்த பணிகள் யாவை ?

7. போப்பையர் திருக்குறளைப் பெரிதும் மதித்தமைக்குக் காரணம் யாது ?

8. போப்பையர் எத்தகைய சிறப்பைப் பெற்ருர் ?

9. போப்பையருக்குத் தமிழ் மொழியினிடத்திலிருந்த பேரன்பை விளக்க ஒரு சான்று தருக.

10. கால்டுவெல் இயற்றிய சிறந்த நூல் எது ? அதன் பெருமையை விளக்குக.

11. கால்டுவெல் தமிழ் நாட்டின்மீது கொண்ட பற்றினை விளக்கும் சான்று யாது ?

12. மேனுட்டார் தமிழ் நாட்டின் பெருமையை உணருமாறு இம் மூவரும் புரிந்த தொண்டுகள் யாவை ?

## மொழிப் பயிற்சி

I. பிரித்து எழுதுக :–முடிகின்றதன்றே, முன்பிருந்த, பேருதவி, எண்ணற்ற, திருவுருவம்.

II. சேர்த்து எழுதுக :—மேற்கு + நாட்டார், நான்கு + நூறு, பொன் + உடல், இரண்டு + ஆண்டுகள், தொண்டு + ஆற்றி, பெருமை + அறிவு.

III. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக :—அறவே, வழிகாட்டியாக, மலிந்துள்ளது, அரும்பாடுபட்டு, தலைசிறந்த, ஐயமற, நிலைக்களமாக, ஊற்றிடம், ஈருக, வாய்ப்பு.

IV. எதிர்ச் சொற்கள் தருக :—ஒறுத்தல், முதுமை, பெருமை, சிற்றூர், முதலாவதாக.

V. 'வீரமாமுனிவரின் தமிழ்த்தொண்டுகள்' என்பதுபற்றிக் கட்டுரை எழுதிப் பழகுக.

## இலக்கணம்

கிறித்தவ மதம், தங்கினர், பக்கம், பங்கு—இச்சொற்களில் உள்ள கி, க, கு என்னும் எழுத்துக்களின் உச்சரிப்பைக் கவனிக்க. 'க' என்னும் ஒலி எழுத்தின் இடத்தை நோக்கி மாறுபடுகிறது. முதலில் வந்த 'கி' என்னும் எழுத்தும், க் என்னும் வல்லெழுத்தின் பக்கத்தில் உள்ள 'க' என்னும் எழுத்தும் ஒரே ஒலியுடையன. மெல்லினத்தை அடுத்து வந்த 'கி' என்னும் எழுத்தும், குற்றியலுகரமாகிய 'கு' என்னும் எழுத்தும் ஒருவகையாக உள்ளன.

| | | | |
|---|---|---|---|
| சமயம் | — ஆசை | — தஞ்சை | — பஞ்சு |
| கட்டடம் | — படம் | — பட்டு | — பண்டு |
| துணிவு | — மதம் | — பத்து | — பந்து |
| பட்டினம் | — பம்பரம் | — கப்பம் | — வம்பு |
| பற்று | — அறம் | — குற்றம் | — குன்று |

மேற்கண்ட சொற்களில் இடத்தை நோக்கி க, ச, ட, த, ப, ற என்னும் எழுத்துக்களின் ஒலிகள் வேறுபட்டிருத்தல் காண்க.

இவற்றால் வல்லெழுத்துக்கள் ஒவ்வொன்றும் முதலிலும், இடையிலும், வல்லெழுத்துக்களை அடுத்தும், மெல்லெழுத்துக்களை அடுத்தும், குற்றிய லுகரமாகவும் வருகையில் ஒலி வேறுபடும் என்று அறிக.

இப்பாடத்திலிருந்து இத்தகைய மாறுபாடுகளுக்கு வகைக்கு இரண்டாக உதாரணம் தருக.

## 2. பாண்டிய மன்னர்கள்

அமிழ்தினும் இனிய தமிழ்மொழி வழங்கும் தமிழ் நாட்டை ஆண்ட முடியுடை மூவேந்தர்களுள் பாண்டிய மன்னர்கள் மிக்க தொன்மையும் சிறப்பும் வாய்ந்தவர்கள். தமிழ் மொழியின் வரலாற்றில் பாண்டிய மன்னர்கள் முதலிடம் பெறத்தக்கவராவர். அவர்கள் முதல், இடை, கடைச் சங்கங்கள் என்னும் மூன்று தமிழ்ச் சங்கங்களையும் நிறுவித் தமிழைப் போற்றி வளர்த்தனர். அதனாலேயே தமிழ், வளம்பெற்ற இனிய மொழியாய், செந்தமிழ் மொழியாய்த் திகழலாயிற்று. செந்தமிழைப் போற்றி வளர்த்த காரணத்தால் பாண்டிய நாடே 'செந்தமிழ் நாடு' எனப் புகழப்படுவதாயிற்று. இங்ஙனம் சிறப்பு வாய்ந்த பாண்டிய மன்னர்களைப் பற்றிய சில செய்திகளைச் சுருக்கமாகக் கூறுவோம்.

பாண்டிய மன்னர்கள் மிகவும் பழமையானவர்கள். அவர்களைச் சந்திர வமிசத்தவர் என்று நூல்கள் குறிக்கின்றன. அவர்கள் எக்காலத்தில் அரசாளத் தொடங்கினர் என்பதை வரையறுத்துக் கூறல் இயலாது. பரிமேலழகர் என்னும் புலவர் சேர, சோழ, பாண்டியர்களைப் படைப்புக்காலம் தொடங்கி வரும் தொன்று தொட்ட குடியினர் என்று கூறியுள்ளார். பழமை என்று பொருள் தரும் 'பண்டு' என்னும் சொல்லிலிருந்தே 'பாண்டியர்' என்னும் பெயர் உண்டாயிற்று என்பர் ஆராய்ச்சியாளர். நம் நாட்டு இலக்கியங்களில் பாண்டிய மன்னர்களின் பழமையை விளக்கப் பல சான்றுகள் உள்ளன. இராமாயணத்தில் பாண்டிய நாட்டையும் அதன் தலைநகராக விளங்கிய கபாடபுரத்தையும் பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. பாரதத்தில் பாண்டவரில் ஒருவனான அருச்சுனன் பாண்டியன் மகளை மணம் செய்துகொண்ட வரலாறு குறிக்கப்பட்டுள்ளது. இவற்றால் இராமாயண பாரத காலங்களுக்கு முன்பே பாண்டிய மன்னர்கள் சிறந்த பேரரசர்களாக விளங்கினர் என்பது புலனாகும்.

மற்றும், கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் இந்தியப்

பேரரசராகத் திகழ்ந்த அசோகருடைய கல்வெட்டுக் களில் பாண்டிய நாட்டைப் பற்றிய செய்திகள் காணப் படுகின்றன. அசோகர் காலத்துக்கு முன்பே நம் நாட் டுக்கு வந்த மெகஸ்தனிஸ் என்னும் கிரேக்க தூதரும் அவருக்குப் பிற்பட்ட பிளினி என்ற கிரேக்க ஆசிரியரும் பாண்டிய நாட்டைப் பற்றி எழுதியுள்ளனர். இலங்கை யின் பழைய வரலாற்று நூலாகிய மகாவமிசத்திலும் பாண்டியரைப் பற்றிய குறிப்புக்கள் உள்ளன. இவற்றால் சரித்திர காலத்துக்கு முன்பே பாண்டியர்கள் புகழ்பெற்ற மன்னர்களாகத் திகழ்ந்தமை தெளிவாகும்.

இங்ஙனம் புகழ்பெற்ற பாண்டிய மன்னர்கள் ஆண்ட நாடு பாண்டிய நாடு என வழங்கப்பட்டது. அது வடக்கே வெள்ளாறும், தெற்கே கன்னியா குமரியும், மேற்கே பெருவழியும், கிழக்கே கடலும் ஆகிய நான்கு எல்லைக்குட்பட்டு ஐம்பத்தாறு காதப் பரப்புடையதாய் விளங்கியது என ஒரு பழஞ்செய்யுள் கூறுகிறது. பாண் டிய மன்னர்கள் மீனைத் தமக்குரிய அடையாளமாகக் கொண்டிருந்தனர். அவர்கள் கொடியிலும் அரசாங்க இலச்சினையிலும் மீனின் உருவம் பொறிக்கப்பட்டிருக் கும். வேப்ப மாலை பாண்டியர்க்குரிய மாலை என இலக் கியங்கள் மூலம் அறியலாம். செழியன், வழுதி, மாறன் என்பன பாண்டியரின் வேறு பெயர்களாம்.

பாண்டிய நாட்டின் தலைநகரம் மதுரையாகும். அது மிக்க அழகும் வளமும் நிறைந்த நகரமாம். கூடல், ஆலவாய் என்பன அதன் வேறு பெயர்கள். கடைச்சங்க காலத்தில் ஆண்ட பாண்டிய மன்னர்களுக்கே மதுரை தலைநகராக விளங்கியது. அதற்கு முற்பட்ட காலத்தில் பாண்டியநாடு மிக விரிந்த பரப்புடையதாய் இருந்தது. அப்போது இன்று கடலாயுள்ள இந்துமகா சமுத்திரத்தில் குமரிமுனைக்குத் தெற்கே மிகப்பெரிய நிலப்பகுதி இருந் தது. அந்நிலப் பகுதியில் பஃறுளி என்னும் பெரிய ஆற்றின் கரையில் விளங்கிய தென் மதுரையே பாண்டி யர்களின் முதல் தலைநகரமாகும். அம்மதுரையில் தான் முதற் சங்கம் நிறுவப்பட்டது.

முதற் சங்க காலத்திருந்த மன்னர்களில் சிறப்பாகக் குறிக்கத்தக்கவன் நிலந்தரு திருவிற் பாண்டியனுவான். அம்மன்னவன் ஆட்சிக் காலத்தில் ஒரு பெரிய கடல் கொந்தளிப்பு ஏற்பட்டது. அப்போது அப்பெரிய நிலப்பகுதி கடலுள் ஆழ்ந்தது. தப்பிப் பிழைத்த அம் மன்னவன் கபாடபுரம் என்னும் நகரத்தைத் தலைநகராகக் கொண்டு அரசாண்டான். அங்கு இரண்டாம் தமிழ்ச் சங்கம் ஏற்படுத்தப்பட்டது. முடத்திருமாறன் என்னும் பாண்டிய மன்னன் காலத்தில் மீண்டும் ஏற்பட்ட கடல் கொந்தளிப்பால் கபாடபுரமும் அழியவே அவன் தற்போதுள்ள மதுரையைத் தலைநகராகக் கொண்டான். அங்கு அவன் மூன்ரும் தமிழ்ச் சங்கத்தை நிறுவித் தமிழை வளர்த்தான். அச்சங்கத்தில் நக்கீரர் முதலான நாற்பத்தொன்பது புலவர்கள் இருந்து தமிழை ஆராய்ந்து பல சிறந்த இலக்கியங்களை இயற்றினர். அவை சங்க இலக்கியங்கள் எனப் புகழப்படுகின்றன. உலகம் போற்றும் திருக்குறளும் அச்சங்கத்திலேயே அரங்கேற்றப்பட்டது.

கடைச் சங்க காலத்தில் வாழ்ந்த பாண்டிய மன்னர்கள் ஒப்பற்ற வீரமும் ஈகையும் உடையவர்களாய்ப் பல நாடுகளையும் வென்று புகழ்பெற்று விளங்கினர். தமிழ்ப் புலவர்களை ஆதரித்து எண்ணிறந்த தமிழ் நூல்கள் வெளிவர உதவி செய்தனர். அம்மன்னர்களில் பெரும்பாலோர் தாமும் தமிழ்ப் புலமை பெற்றுக் கவிபாடும் திறம்பெற்று விளங்கினர். அங்ஙனம் வரலாற்றுச் சிறப்பும் இலக்கியச் சிறப்பும் வாய்ந்த வேந்தர்களில் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனும், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனும் சிறப்பாகக் குறிக்கத்தக்கவராவர்.

பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் பாண்டிய மன்னர்களின் நீதி தவருத நேர்மைக்கு எடுத்துக் காட்டாகக் கூறத்தக்கவனுவான். இவன் சிலப்பதிகார காலமாகிய கி. பி. இரண்டாம் நூற்ருண்டில் வாழ்ந்தவன். இம்மன்னன் ஊழ்வினை வயத்தால் பொற்கொல்லன் வார்த்தையைக் கேட்டுக் கோவலனை ஆராயாது

கொல்வித்தான். கோவலன் மனைவியாகிய கண்ணகி என்னும் வீரபத்தினி இவன் அவைக்களம் புகுந்து தன் காற்சிலம்பை உடைத்துக் காட்டித் தன் கணவன் கள்வனல்லன் என்பதை மெய்ப்பித்தபோது நெடுஞ்செழியன் தன் தவறுணர்ந்து நாணி,

"பொன்செய் கொல்லன் தன்சொற் கேட்ட
யானோ அரசன் யானே கள்வன் ;
மன்பதை காக்கும் தென்புலம் காவல்
என்முதல் பிழைத்தது ; கெடுகஎன் ஆயுள்"

எனக் கூறி அரியாசனத்திலிருந்து வீழ்ந்து ஆருயிர் துறந்தான். 'மான மழிந்தபின் வாழாமை முன் இனிதே' என்பது தமிழர் பண்பாடன்றோ? நெடுஞ்செழியன் மனைவி பாண்டிமா தேவியும் தன் கணவன் உயிர் துறந்தமை அறிந்து உடனே உயிர் துறந்தாள். அவளுடைய கற்பு மாண்பினை என்னென்று புகழ்வது?

இத்தகைய செங்கோல் தவறாத வேந்தனாகிய நெடுஞ்செழியனுடைய பெருமையையும் செங்கோலைக் காக்க உயிர்விட்ட சிறப்பையும் சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள், 'விதியினால் பாண்டியன் செங்கோல் வளைந்தது. எனினும் பாண்டியன் அக்குற்றமுணர்ந்து தன் ஆருயிரையே வழங்கி வளைந்த செங்கோலை நிமிர்த்தினான்,' என்று மிகவும் பாராட்டிக் கூறியுள்ளார்.

இம்மன்னவன் ஒப்புயர்வற்ற வீரமுடையவன்; தமிழில் பெரும்புலமையுடையவன். இவன் பெயருக்கு முன் உள்ள அடை மொழியால் இவன் வட ஆரியர் படையை வென்று வெற்றிகண்ட செய்தி விளங்குகின்றது. இவன் பாடிய மிக அழகான செய்யுள் ஒன்று புறநானூற்றில் உள்ளது. அதனால் இம்மன்னனுடைய பேரறிவை நன்குணரலாம்.

இம்மன்னவனுக்குப்பின் பாண்டிய நாட்டை ஆண்ட வேந்தர்களில் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் மிகவும் சிறந்தவனாவான். இவன் இளமையிலேயே அரசுரிமை ஏற்றான். இளையவனாகிய இவனை

வென்று பாண்டிய நாட்டைக் காப்பாற்றும் நோக்கத் துடன் சோழ, சேர மன்னர்கள் இருவரும் குறுநில மன் னர்கள் ஐவரும் ஒருங்கு சேர்ந்து பாண்டிய நாட்டின் மீது படையெடுத்தனர். அதனை உணர்ந்த நெடுஞ்செழி யன் மிக்க சினங்கொண்டு, "நான் அப்பகைவர்களை வென்று புறங்காணேன் ஆயின் குடிபழிதூற்றும் கொடுங் கோலனுவேன்; மாங்குடி மருதனைப் போன்ற புலவர்கள் என்னைப் பாடா தொழிவாராக," என்று வஞ்சினம் உரைத்துப் போர் மேற்கொண்டான்.

இருதிறப்படைக்கும் தலையாலங்கானம் என்னும் இடத்தில் பெரும்போர் நிகழ்ந்தது. இளைஞனுகிய நெடுஞ்செழியன் தான் ஒருவனே அவ்வெழுவருடன் போர் புரிந்து புறங்காட்டி ஓடச்செய்ததுடன் அவர் நாடுவரை துரத்திச் சென்று அவர்களைக் கொன்ருன். இத்தகைய இவனுடைய ஒப்பற்ற ஆற்றலை **இடைக்குன்றூர் கிழார்** என்னும் புலவர் வியந்து பாராட்டியுள்ளார்.

"சதங்கை கட்டப்பட்ட காலிலே வீரக்கழலை அணிந்து, வளை ஒழிந்த கையிலே வில்லைப்பிடித்து நிற்கும் இவ்விளைய வீரன் யார்? இவன் வாழ்வானுக! இவன் ஐம்படைத் தாலியையும் கழற்றவில்லை; பாலை நீக்கி இன்றே உணவும் உண்டான். இத்தகைய பால் மணம் மாருத இவ்விளையோன் தான் ஒருவனேயாய் வலிய பகை வரை இறுகப் பிடித்து நிலத்தில் மோதிக் கொன்ருன். அங்ஙனம் கொன்றதற்காக இவன் மகிழவும் இல்லை. தன் ஆற்றலுக்காகச் செருக்குக் கொள்ளவுமில்லை. இவன் ஆற்றலை என்னென்று புகழ்வது!" என்பது அப்புலவர் அப்போது வியந்து பாடிய செய்யுளின் கருத்தாகும். இங்ஙனம் ஈடும் எடுப்புமற்ற வெற்றி பெற்றமையாலேயே இவ்வேந்தன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன் எனப் புகழ் பெற்ருன்.

வீரத்திற் சிறந்த நெடுஞ்செழியன் பெரும்புலவனுக வும் விளங்கினுன். இவன் கூறிய வஞ்சினம் ஓர் அழகிய செய்யுளாகவே அமைந்து புறநானூற்றில் இடம் பெற் றுள்ளது. இவன் புலவர் பலரைப் போற்றிப் புலவர்

பாடும் புகழுடையவனுகத் திகழ்ந்தான். இவன் அவைக் களப் புலவர் தலைவராக விளங்கிய **மாங்குடி மருதனுர்** என்ற அருந்தமிழ்ப் புலவர் இம்மன்னன்மீது **மதுரைக் காஞ்சி** என்னும் மிகச் சிறந்த நூலை இயற்றினர். **நக்கீரர்** என்னும் பெரும் புலவர் இம்மன்னனுடைய பெருமையை நெடுநல்வாடை என்னும் நூலை இயற்றிப் போற்றினர். இவ்விரு நூல்களாலும் நெடுஞ்செழிய னுடைய வீரம், கல்விச் சிறப்பு, புகழ், அரசியல் திறமை, மதுரையின் வளம் ஆகியவற்றை நாம் நன்குணரலாம். இவ்விரு நூல்களும் **பத்துப் பாட்டு** என்னும் தொகை நூலில் சேர்க்கப்பட்டுள்ளன.

கடைச் சங்க காலத்துக்குப் பிறகு **களப்பிரர்** என்ற அயல் நாட்டினர் பாண்டியரை வென்றனர். அதனுல் சில நூற்ருண்டுகள் பாண்டியர் தம் பெருமை குன்றிச் சிற்றர சராய் வாழ்ந்து வந்தனர். கி. பி. ஆரும் நூற்ருண்டில் வாழ்ந்த **கடுங்கோன்** என்னும் பாண்டிய மன்னன் களப் பிரரை வென்று மீண்டும் மதுரையில் பாண்டியப் பேரரசை நிலைநாட்டினுன். இவனுக்குப் பின்னர் ஆண்ட பாண்டிய மன்னர்கள் **மாறவர்மன்**, **சடைய வர்மன்** என்னும் பட்டப் பெயர்களை ஒருவர்பின் ஒருவராக மாறி மாறித் தம் பெயருக்கு முன்னர் வைத்துக் கொண்டனர். அவர்களில் கி. பி. ஏழாம் நூற்ருண்டில் வாழ்ந்த **மாற வர்மன் அரிகேசரி** என்பவன் சிறந்தவனுவான். இவன் இலக்கியப் புகழ்பெற்ற வேந்தனுவான். இவன் சுந்தர பாண்டியன், கூன் பாண்டியன் எனவும் வழங்கப்பட் டான். பெரிய புராணத்தில் இவன் பெயர் ‘நின்றசீர் நெடுமாறன்’ என்று கூறப்பட்டுள்ளது. மங்கையர்க்கரசி என்பவர் இவ்வேந்தனுடைய மனைவியாவார். இந்நெடு மாறன் சமண சமயத்தைப் பின்பற்றி வாழ்ந்தான்; மங்கையர்க்கரசியார், அமைச்சர் குலச்சிறையார் ஆகி யோர் பெருமுயற்சி புரியவே திருஞானசம்பந்தநாயனு ரால் மீண்டும் சைவசமயத்தைச் சார்ந்தான். சைவ சம யத்துக்கு அருந்தொண்டாற்றிய இம்மூவரும் சைவ நாயன் மார்களாகக் கருதிப் போற்றப்பட்டு வருகின்றனர்.

இம்மன்னனுடைய ஆட்சியில் பாண்டிய நாடு மிக்க உயர்நிலை உற்றிருந்தது. இவன் சேர சோழரையும் ஏனைய குறுநில மன்னர்களையும் நெல்வேலி என்ற இடத்தில் வென்றான்; அதனால் அவர்கள் பணிந்து திறை செலுத்த 'நெல்வேலி வென்ற மாறன்' என்ற புகழுடன் சிறப்பாக ஆண்டு வந்தான். இவன் காலத்தில் சீன நாட்டு யாத்திரிகரான **யுவான் சுவாங்** என்பவர் பாண்டிய நாட்டுக்கு வந்திருந்தார். அவர் பாண்டிய நாட்டில் முத்தும் உப்பும் மிகுதியாக உள்ளன என்றும், அந்நாட்டு மக்கள் போர்வலிமையுடைய வீரர்கள் என்றும், வாணிகச் சிறப்பால் நாடு செல்வத்தில் சிறந்திருந்தது என்றும் தாம் நேரில் கண்டதைக் குறிப்பிட்டுள்ளார். எனவே அக்காலத்தில் பாண்டிய நாடு உன்னத நிலையில் இருந்தது என்பது நன்கு விளங்கும்.

கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டுக்குப் பிறகு தமிழ் நாட்டில் சோழர்கள் ஆட்சி வலுப் பெற்றமையால் மீண்டும் பாண்டியர் ஆட்சி சீர்குலைந்தது. அக்காலத்தில் பாண்டிய மன்னர்கள் புகழ் குன்றிச் சிற்றரசர்களாய் வாழ்ந்து வந்தனர். எனினும் சில சமயங்களில் அவர்கள் சேர சோழ மன்னர்களையும், ஏனைய அரசர்களையும் வென்று புகழ் பெற்று வாழ்ந்தனர். கி. பி. 1251 முதல் 1271 வரை அரசாண்ட **முதல் சடையவர்மன் சுந்தரபாண்டியன்** ஒப்புயர்வற்ற வீரனாய் அரசர் பலரையும் வென்று அடக்கிப் புகழ்பெற்ற பேரரசனாக விளங்கினான். அவன் காலத்தில் பாண்டியநாடு தெற்கே கன்னியாகுமரி முதல் வடக்கே நெல்லூர் வரை பரவி இருந்தது. அதனால் அவன் ஆட்சிக் காலத்தைப் பாண்டியராட்சியின் பொற்காலம் என்று கூறலாம்.

அவனுக்குப் பின் வந்த மன்னர்கள் அவ்வளவு திறமை இல்லாதவர்களாக விளங்கியமையால் ஒரு சமயம் உயர்ந்தும் மற்றொரு சமயம் தாழ்ந்தும் வாழ்ந்து வரலாயினர். அதனால் முதலில் பாண்டிய நாட்டில் மகம்மதியர்களுடைய ஆட்சியும், அதற்குப் பின்னர் நாயக்க மன்னர்களின் ஆட்சியும் ஏற்படலாயின. இங்ஙனம்

புகழ்மிக்க ஓர் அரசபாரம்பரை அழிந்தமை தமிழ் நாட்டின் தவக்குறைவே என்னலாம்.

## அருஞ்சொல் விளக்கம்

முடியுடை மூவேந்தர் - சேர, சோழ, பாண்டியர் ; வாய்ந்த - பொருந்திய ; வரையறுத்து - எல்லையிட்டு ; தொன்று தொட்ட - மிகப் பழமையான ; சான்று - அத்தாட்சி ; புலனுகும் - விளங்கும் ; காதம் - பத்து மைல் ; இலச்சினை - அடையாளம் ; அரியாசனம் - சிங்காதனம் ; மன்பதை - உலகிலுள்ள உயிர்கள் ; தென்புலம் - தென்னுடு ; பிழைத்தது - குற்றமுடையதாயிற்று ; முன் இனிது - மிக இனிமையானது ; பண்பாடு- கொள்கை ; வஞ்சினம் - சபதம் ; ஐம்படைத்தாலி - திருமாலின் ஆயுதங்களாகிய சங்கு, சக்கரம், தண்டு, வாள், வில் என்னும் ஐந்து உருவங்களால் ஆகிய ஆபரணம் ; ஈடும் எடுப்பும் - ஒப்பும் உயர்வும் ; எயில் - மதில்.

## வினுக்கள்

1. செந்தமிழ் நாடு எனப் புகழப்படுவது யாது? அதற்கு அப்பெயர் வழங்கக் காரணம் என்ன ?

2. பாண்டியர்களுடைய தொன்மையை விளக்க இரு சான்றுகள் தருக.

3. பாண்டிய நாட்டின் எல்லைகள் யாவை?

4. இடைச் சங்கத்தை நிறுவிய அரசன் யார்? அஃது எங்கு நிறுவப்பெற்றது?

5. கடைச் சங்கத்தைத் தோற்றுவித்த பாண்டிய மன்னன் யார்? அங்ஙனம் அவன் தோற்றுவிக்கக் காரணம் யாது?

6. சிலப்பதிகார ஆசிரியர் நெடுஞ்செழியனின் நீதி தவருத பண்பை எங்ஙனம் பாராட்டியுள்ளார்?

7. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியனின் ஒப்பற்ற ஆற்றலை இடைக்குன்றூர் கிழார் எங்ஙனம் பாராட்டினர் ?

8. இம்மன்னனைப் பாராட்டிக் கூறும் நூல்கள் யாவை ? அவற்றின் ஆசிரியர் யாவர் ?

9. திருஞான சம்பந்தர் காலத்தில் வாழ்ந்த பாண்டிய மன்னன் யார் ? அவனது பெருமையை விளக்குக.

10. யுவான்சுவாங் என்பவர் யார்? அவர் பாண்டிய நாட்டைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளன யாவை?

## மொழிப் பயிற்சி

I. பிரித்து எழுதுக :—பேரரசர், எல்லைக்குட்பட்டு, முதற் சங்கம், பொற்கொல்லன், காற்சிலம்பு, தவறுணர்ந்து, ஆருயிர், பேரறிவு.

II. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக :—வரையறுத்து, சான்று, பண்பாடு, வஞ்சினம், ஈடும் எடுப்பும், ஒப்புயர்வற்ற.

III. கோடிட்ட இடங்களில் தக்க சொற்களை அமைக்க :—

1. முதற் சங்கம் —— நிறுவப் பெற்றிருந்தது.
2. இலங்கைச் சரிதம் —— என வழங்கப்படும்.
3. பாண்டியருக்கு ——, ——, —— என வேறு பெயர்களுண்டு.
4. —— என்னும் அரசன் கபாடபுரம் என்னும் நகரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தான்.
5. கடைச் சங்கத்தை நிறுவிய மன்னன் —— என்பவனாவான்.
6. பிற்காலத்தில் பாண்டிய அரசர் ——, —— என்னும் பட்டங்களை மாறிமாறித் தாங்கி வந்தனர்.

## இலக்கணம்

நகு, குடகு, கடு, பண்டு—இச்சொற்களை உச்சரித்துப் பாருங்கள். நகு, கடு என்பவற்றின் ஈற்றிலுள்ள கு, டு என்னும் எழுத்துக்களுக்கும், குடகு, பண்டு என்பவற்றிலுள்ள கு, டு என்னும் எழுத்துக்களுக்கும் ஓசையில் வேறுபாட்டைக் காணலாம். முன்னவற்றிலுள்ள கு, டு என்னும் எழுத்துக்களின் ஒலியைவிடப் பின்னவற்றிலுள்ள அவ்வெழுத்துக்களின் ஒலி குறைந்திருப்பதை அறிவீர்கள். இங்ஙனம் குறுகிய ஒலியையுடைய உகரங்கள் **குற்றியலுகரங்களாம்.** ஓசை குறையாத நகு, கடு என்னும் சொற்களில் உள்ள உகரங்கள் **முற்றியலுகரங்களாம்.**

**குற்றியலுகரத்தை அறியும் வழிகள் :—**

1. குற்றியலுகரம் மொழிக்கு இறுதியில் மட்டுமே வரும்.

2. கு, சு, டு, து, பு, று என்னும் வல்லின உகரங்களே ஓசையில் குறைந்து வரும்.

3. இரண்டெழுத்துச் சொல்லாயின் முதலெழுத்து நெட்டெழுத்தாயிருத்தல் வேண்டும்.

**குற்றியலுகரத்தின் வகைகள் :—**

குற்றியலுகரத்தை ஈற்றெழுத்துக்கு அடுத்த எழுத்தை நோக்கி ஆறு வகையாகப் பிரிக்கலாம். அவையாவன :

| | |
|---|---|
| ஆறு | — நெடில் தொடர்க் குற்றியலுகரம் |
| சுக்கு | — வன்றொடர் ,, |
| பண்டு | — மென்றொடர் ,, |
| பெய்து | — இடைத்தொடர் ,, |
| அஃது | — ஆய்தத்தொடர் ,, |
| வயது | — உயிர்த்தொடர் ,, |

# 3. களவழி நாற்பது

தமிழ் மொழியில் பல துறைபற்றித் தோன்றிய இலக்கியங்கள் உள்ளன. அவற்றுள் போரை அடிப்படையாகக்கொண்ட இலக்கிய வகையும் ஒன்ருகும். சங்க காலத்தில் வாழ்ந்த புலவர்கள் அரசர் பலரின் போர்த் திறம், வெற்றிப் பெருமை ஆகியவைகளைத் தனித் தனிப் பாடல்களில் வியந்து பாராட்டியுள்ளனர். அத் தகைய பாடல்களைப் புறநானூறு என்னும் சங்க நூலில் காணலாம். **செங்கோன் தரைச் செலவு, களவழி நாற்பது** என்னும் நூல்கள் போர் காரணமாகத் தோன்றிய இலக்கியங்களேயாகும். இவற்றுள் களவழி நாற்பது என்னும் இலக்கியம் தோன்றிய வரலாறு மிக்க சுவை யான நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டதாகும்.

களவழி நாற்பது என்னும் நூல் தமிழில் வழங்கும் பதினெண்கீழ்க் கணக்கு என்னும் நூல் வரிசையில் ஒன் ருகும். இந்நூலை இயற்றிய ஆசிரியர் **பொய்கையார்** என் னும் கடைச் சங்ககாலப் புலவராவர். சொற்சுவை பொருட் சுவை நிறைந்த இந்நூல் முழுதும் போர்க்கள வருணனை யாகவே அமைந்துள்ளது. போர்க்களத்தைப் பற்றிப் புனைந்து கூறப்பட்ட நாற்பது பாடல்களைக் கொண்ட காரணத்தாலேயே இந்நூல் இப்பெயர் பெற்றது. ஆசிரி யர் பொய்கையார் சேரநாட்டுத் துறைமுகப்பட்டினமாகிய **தொண்டி** என்னும் ஊரைச் சார்ந்தவராவர். இவரைப் பற் றிய வரலாறு ஒன்றும் தெரியவில்லை. அக்காலத்தில் சேர நாட்டின் ஒரு பகுதியையாண்ட **சேரமான் கணைக்கால் இரும்பொறை** என்னும் சேர மன்னன் இவருடைய மாணவனுவான். இதனுல் இப்புலவருடைய பெருமை நன்கு விளங்கும். இனி, இந்நூல் தோன்றக் காரணமா யிருந்த வரலாற்றினை அறிவோம்.

பொய்கையாரின் மாணவனுகிய கணைக்கால் இரும் பொறை என்ற வேந்தன் கல்வி கேள்விகளில் சிறந்து பெரும் புலவனுக விளங்கினுன்; தானே கவிபாடும் திறமையும் பெற்றிருந்தான். அவன் அருங்குணங்கள்

பலவும் அமைந்தவன் ; மானமே பெரிதென மதித்தவன் ; புலவர்கட்குப் புகலிடமாக விளங்கியவன். இவ்வரிய பண்புகளோடு அவன் ஒப்புயர்வற்ற வீரனுகவும் விளங்கினுன். அதனுல் அவன் ஆட்சி நல்லாட்சியாய் அமைந்தது. அவன் குடிமக்கள் போற்றும் கொற்றவனுக விளங்கினுன்.

இரும்பொறை சேர நாட்டை ஆண்டுவந்த அக்காலத்தில் கோச்செங்கணுன் என்னும் மன்னன் சோழ நாட்டை ஆண்டு வந்தான். அம்மன்னன் சிறந்த சிவ பக்தன் ; பல சிவன் கோயில்கள் கட்டியவன். 'எண்டோள் ஈசர்க்கு எழில் மடம் எழுபது செய்து உலகாண்டவன்' என்று நூல்கள் அவனைப் பாராட்டுகின்றன. அவ்வேந்தன் பெருவீரனுகவும் விளங்கினுன் ; பற்பல போரில் பகைவரை வென்று வாகை சூடினுன். கோச்செங்கணுனுக்கும் இரும்பொறைக்கும் எக்காரணத்தாலோ பகைமை ஏற்பட்டது. நாளடைவில் அப்பகைமை வளர்ந்து போராய் மூண்டது. திருப்போர்ப்புறம் என்னும் இடத்தில் இருதிறத்தாருக்கும் பெரும்போர் நடந்தது. இருபெரு வேந்தரும் தம் ஆற்றலைக் காட்டி வீரப்போர் புரிந்தனர். கடல்போல் பரந்த இருபெருஞ் சேனையும் பொருத காட்சி கண்டவரை அச்சுறுத்தியது. இருபக்கத்தார்க்கும் பெருஞ்சேதம் விளைந்தது. முடிவில் சோழப் படையே வென்றது. கணைக்கால் இரும்பொறை சோழ மன்னனுல் சிறைப்படுத்தப்பட்டான்.

சிறைப்பட்ட சேர வேந்தன் குடவாயிற் கோட்டம் என்னும் ஊரில் உள்ள சிறைச்சாலையில் காவலில் வைக்கப்பட்டான். இங்ஙனம் பகைவனுல் கைப்பற்றப்பட்ட அக்காவலன் தன்நிலை குறித்து மிகவும் வருந்தினுன். மானத்தைப் பெரிதெனப் போற்றும் அம்மன்னவன் தனக்கு நேர்ந்த பேரவமானத்தை எண்ணி எண்ணி ஏங்கினுன் ; அந்த ஏக்கத்தால் உணவும் உண்ண விரும்பாதவனுகி வாடினுன். இரும்பொறையின் அந்நிலையை அறிந்தார், அவனுடைய அன்பு மிக்க ஆசிரியர் பொய்கையார். சிறந்த தமிழ்ப் புலவனும் புலவரைப் போற்றும்

பண்புடையவனுமாகிய அவன் சிறைப்பட்டு வருந்துவது தமிழே சிறைப்பட்டதுபோல அவர் உள்ளத்தை வருத்தியது. அதனுல் எவ்வகையிலேனும் அவனே விடுவித்து இரும்பொறைக்கும் செங்கணுனுக்கும் நட்பினே உண்டாக்க வேண்டும் என்று விரும்பினுர் அந்நற்றமிழ்ப் புலவர். அதனுல் அவர், செங்கணுன் மனத்தை மகிழ்வித்துத் தக்க வகையில் அறிவுரையும் கூறித் திருத்துதல் வேண்டும் என்று முடிவு செய்தார்; திருப்போர்ப்புறத்தில் செங்கணுன் பெற்ற பெருவெற்றியைப் பாராட்டிப் போர்க்கள வருணனே நிறைந்த களவழி நாற்பது என்னும் நூலேப் பாடினுர்.

இதற்கு இடையில் எதிர்பாராத ஒரு துன்ப நிகழ்ச்சி ஏற்பட்டது. சிறையில் உணவும் உண்ணுமல் வருந்தியிருந்த சேரமான் ஒரு நாள் பசி ஒருபுறம் வருத்த நீர் வேட்கையால் நெஞ்சம் உலர்ந்து பேசவும் முடியாத நிலேயெய்தினன். அதனுல் அவன் உளம் வருந்தி அங்கிருந்த சிறைக் காவலனே அழைத்துச் சிறிது நீர் தருமாறு கேட்டான். அக்காவலன் அகந்தை மிக்கவன்; இரக்க மில்லாத நெஞ்சினன்; உணவுண்ணுமல் வாடிய அம்மன்னவன் வருந்தி நீர் கேட்டும் உடனே கொண்டு வந்து தராமல் வெகுநேரம் கழித்து ஒரு பாத்திரத்தில் தண்ணீரைக் கொண்டுவந்து இடக்கையால் அலட்சியமாக வைத்துச் சென்ருன்.

காவலனது அலட்சியத்தைக் கண்ட கணேக்கால் இரும்பொறை பெருஞ்சினங் கொண்டான். அவமானத்தால் அவன் உள்ளம் துடித்தது. "போரில் இறந்திருந்தால் இத்தகைய பேரவமானம் நேர்ந்திராதன்ருே? போரில் மார்பில் புண்பட்டு வீர மரணம் அடைவதன்ருே வேந்தர்க்கு அழகு. போரில் அன்றி நோயால் இறந்தாலும், குழந்தை இறந்தாலும் போரில் இறந்தமைக்கு அறிகுறியாக உடலே வாளால் வெட்டிப் புதைப்பது அரச குலத்தின் மரபன்ருே? அத்தகைய வீரக்குடியில் பிறந்தும் போரில் தோல்வியடைந்து சிறைப்பட்டதுடன் சங்கிலியால் கட்டப்பட்டு நாய்போல் இழுத்து வரப்பெற்

றேனே! என்னே என் வீரம்! அத்தகைய அவமானம் உற்றும் உயிர் தாங்கி நிற்பதுடன் அற்பனுகிய இக்காவலனுலும் அலட்சியப்படுத்தப்பட்டேனே. இவனிடம் இத்தண்ணீரைக் கேட்காமல் இருக்கும் மனவலிமை இல்லாமல் கெட்டேனே! என் வயிற்றுத் தீயைத் தணித்துக் கொள்வதற்காக மானமிழந்து இத்தண்ணீரைப் பருகி உயிர் வாழ்வது என் குலத்துக்கே இழுக்கன்றோ?

“மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னுர்
உயிர்நீப்பர் மானம் வரின்.”

என்பது பொய்யா மொழியன்றோ! இங்ஙனம் என் குலத்துக்கு மட்டுமன்றி அரச குலத்துக்கே இழுக்குண்டாகும் வகையில் இந்நீரை அருந்தி வாழ்வதினும் ஆருயிர் துறப்பதே மேலன்றோ?” என்று கணைக்கால் இரும்பொறை அனலிடைப்பட்ட மெழுகென உருகினுன். தன் மனக் கருத்தை எல்லாம் அழகிய ஒரு தமிழ்ப் பாடலாகப் பாடி வைத்துவிட்டு அந்நீரைப் பருகாமலே உயிர் துறந்தான் அந்த உத்தமன். என்னே அவனுடைய மானமுடைமை!

இங்ஙனம் இரும்பொறை இறந்த நிகழ்ச்சியை அறியாத பொய்கையார் அதே சமயத்தில் கொச்செங்கணுன் அவைக்களம் அடைந்தார். அருந்தமிழ்ப் புலவரின் வரவுணர்ந்த அம்மன்னன், “வருக! வருக!” என வரவேற்று உயர்ந்த ஆசனத்தில் அமரச் செய்து போற்றினுன்; “தமிழ்ப் புலவராகிய தங்கள் வருகையால் என் அவை பெருமை பெற்றது. தங்களுடைய வரவின் காரணத்தை அறிய விரும்புகின்றேன்,” என்று பணிந்து வேண்டினுன்.

பொய்கையார், “வளவர் குலத் தோன்றலே! வாழி! வாழி! வாழ்க உன் அரசியல்! என்னைப் போன்ற புலவர்கள் உம்போன்ற பேரரசனை நாடி வருவது கவித்திறமையால் உம்மை மகிழ்வித்துப் பரிசு பெற்றுச் செல்வதற்கே என்பது தாங்கள் உணராததா? நான் தாங்கள் திருப்போர்ப்புறத்தில் புரிந்த பெரும்போரைப் பாராட்டிக் களவழி நாற்பது என்னும் நூல் பாடியுள்ளேன். அதனைக்

கேட்டுக் கருணை புரிய வேண்டும்,'' என வேண்டி நின்ருர். செங்கணுன் அந்நூலின் கவிநயத்தை விளக்கு மாறு வேண்டினுன். பொய்கையார் களவழி நாற்பதைப் படித்து அப்பாடல்களின் கருத்தழகையும் கற்பனை நயத்தையும் விளக்கினுர்.

"காவிரி பாயும் நாட்டையாளும் சோழமன்னன் தன் பகைவரைக் கொன்ற போர்க் களத்தில் பகைவருடைய யானைகள் துதிக்கை அறுபட்டு இரத்தம் சொரிய நின்றன. அக்காட்சி கருமை நிறமுடைய பைகளிலிருந்து பவளத்தை அவிழ்த்துக் கொட்டுவது போன்றிருந்தது. கையில் பிடித்த கேடயம் என்னும் ஆயுதத்துடன் அறுந்து வீழ்ந்த வீரர்களின் கைகளை நரிகள் இழுத்துச் செல்லும் காட்சி கண்ணுடிகொண்டு முகம் பார்ப்பவரைப் போல் காணப்பட்டது. போர்க்களத்தில் நால்வகைப் படையும் அழியப் பெருகிய இரத்த வெள்ளத்தால் அப் போர்க்களம் முழுதும் செந்நிறமாய்க் காட்சியளித்தது. அது நிலமகள் செவ்வாடை அணிந்து விளங்கியது போன்று இருந்தது. வளம் மிக்க சோலையில் பெருங் காற்று மோத, அஞ்சி நாற்புறமும் அகவிக் கொண்டோடு கின்ற மயிற் கூட்டங்களைப் போலக் கணவனை இழந்த மகளிர் கதறிப் புலம்பினர்.''

இவைபோன்ற அழகிய கருத்துக்கள் அந்நூல் முழுதும் இடம் பெற்றிருந்தன. அவற்றைக் கேட்ட சோழ மன்னன் புலவரின் கவித்திறமைக்கு மகிழ்ந்தான்; எனினும் தான் செய்த பெரும் போரால் எண்ணற்ற உயிர்கள் மாயவும் அதனுல் பலர் கதறிப் புலம்பவும் நேர்ந்தமை குறித்து உளம் மிக வருந்தினுன். அதனுல் அவன் பொய்கையாரை நோக்கி, "புலவர் பெருமானே! தங்கள் கவித் திறமையைப் போற்று கின்றேன்; தாங்கள் போர்க்களத்தைப் புனைந்து பாடிய இந்நூலின் உட்கருத்தையும் உணர்ந்து கொண்டேன்; நான் நல்லறிவு பெற்றேன்; என் பெருமைக்காக எண்ணற்ற உயிர்களைக் கொன்ற என் அறியாமையை உணர்ந்தேன்; இனி மறத் தொழிலைவிட்டு அறத் தொழிலை மேற்

கொள்வேன்; எனக்கு நல்லறிவு கொளுத்திய தங்கட்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்?'' என்று உள்ளம் உருகக் கூறினுன்.

செங்கணுன் உரை கேட்ட பொய்கையார் உள்ளம் மகிழ்ந்தார்; ''அரசே! தாங்கள் செய்ய வேண்டிய கைம் மாறு ஒன்று உள்ளது. இரும்பொறை என்னருமை மாணவன்; ஒப்புயர்வற்ற தமிழ்ப் புலவன். அவனைச் சிறையிலிருந்து விடுதலை செய்து அவனேடு நட்புரிமை பாராட்டி வாழ்வதையே நான் பரிசாக வேண்டுகின் றேன்,'' என்று வேண்டினுர். செங்கணுன் புலவர் உரை கேட்டுத் திடுக்கிட்டு, ''புலவர்மணியே! சேர மன்னர் தங்கள் மாணவரா? தமிழ்ப் புலவரா? என்னே என் அறி வீனம். தமிழறிந்த புலவரைச் சிறை செய்தது தாயைச் சிறை செய்ததாகு மன்றோ! இப்பொழுதே அம் மன்னரை விடுதலை செய்கின்றேன். வாருங்கள்; நானும் சிறைச் சாலைக்கு வந்து அவரிடம் மன்னிப்பு வேண்டு கின்றேன்,'' என்று உரைத்துப் புலவரையும் அழைத்துக் கொண்டு விரைந்து குடவாயிற் கோட்டம் அடைந்தான்.

ஆனுல் சிறைச்சாலையில் அவர்கள் கண்ட காட்சி அவர்களைப் பெருந்துன்பத்தில் ஆழ்த்திவிட்டது. மான மிழந்து வாழ விரும்பாத இரும்பொறை இறந்தமை அறிந்து இருவரும் உள்ளம் துடித்தனர். இரும்பொறை எழுதி வைத்த பாடலைப் படித்த செங்கணுன் மானத்தைக் காக்க உயிர்விட்ட சேரனின் வீரத்தைப் பெரிதும் பாராட்டினுன்; ஆனுல் அற்பனுகிய சிறைக் காவலனுல் தன் ஆட்சிக்கு ஏற்பட்ட அவமானத்தை எண்ணி மனம் வருந்தினுன். செங்கணுன் மனம் உருகியது. கண் களில் கண்ணீர் பெருகியது. ''புலவர் பெருமானே! ஒப் பற்ற தமிழ்ப் புலவனும் வீரனும் மானியுமாகிய இம்மன் னனைச் சிறைசெய்து நான் பெரும்பழி பூண்டேன். சோழ பரம்பரைக்கே இது பெரிய களங்கமாகும். என் செய்வேன்! என் பிழையை மன்னிக்குமாறு வேண்டுகின் றேன்,'' என்று பணிந்தான். பொய்கையார் அவனுக்கு

ஆறுதல் பல உரைத்தார். "இரும்பொறையின் மரணம் ஒரு படிப்பினையை உணர்த்துகின்றது. இனியாவது



செங்கணான் உயிர் நீத்த இரும்பொறையின் பாடலைப் படித்தல்

தமிழ் நாட்டு வேந்தர்களாகிய நீவிர் பகைகொண்டு போர் புரியாமல் ஒற்றுமையாக வாழ்ந்து தமிழை வளர்த்துத் தமிழ் நாட்டையும் பெருமைப் படுத்துவீர்களாக," என்று புலவர் அறிவுரை கூறித் தெளிவித்தார்.

இங்ஙனம் மானத்தின் மாண்பினை விளக்கும் அரிய வரலாற்று நிகழ்ச்சியை அடிப்படையாகக்கொண்டு இயற்றப்பட்டதே களவழி நாற்பது என்னும் சிறந்த நூல். நீங்கள் பெரியவர்களானவுடன் அந்த நூலைப் படித்து மகிழ்வீர்களாக. மானத்தின் பெருமையை உணர்ந்து மானம் இழக்கும் செயலைச் செய்யாமல் வாழ்ந்து புகழ் பெறுவீர்களாக.

## அருஞ்சொல் விளக்கம்

புனைந்து - வருணித்து; புகலிடம் - அடைக்கலம் அடையும் இடம்; பண்பு - குணம்; கொற்றவன் - அரசன், வெற்றிமிக்கவன்; எண்டோள் ஈசர் - எட்டுக் கரங்களையுடைய சிவபெருமான்; பொருத - போர் புரிந்த; அச்சுறுத்தியது - பயமடையச் செய்தது; காவலன் - அரசன்; ஏங்கினன் - வருந்தினன்; எய்தினன் - அடைந்தான்; அகந்தை - கர்வம்; மரபு - வழக்கம்; கவரி மா - ஒரு வகை மான்; நீப்பர் - விடுவர்; மானம் வரின் - மானம் இழக்க நேர்ந்தால்; இழுக்கு - குற்றம்; அனல் - நெருப்பு; அவை - சபை; வளவர் - சோழர்; தோன்றல் - தலைவன்; கைம்மாறு - பிரதி உபகாரம்; படிப்பினை - நீதி.

## வினாக்கள்

1. களவழி நாற்பதின் ஆசிரியரைப் பற்றிச் சிறு குறிப்பு வரைக.
2. கணைக்கால் இரும்பொறை எங்ஙனம் யாரால் சிறைப்படுத்தப் பட்டான்?
3. சிறைப்பட்ட சேர மன்னனின் துன்ப நிலையை விவரிக்க.
4. களவழி நாற்பது எனும் நூலைப் பொய்கையார் ஏன் பாடத் துணிந்தார்?
5. அவமதிக்கப்பட்டபோது இரும்பொறையின் உள்ளத்தில் தோன்றிய எண்ணங்கள் யாவை?
6. களவழி நாற்பதில் கூறப்பட்டுள்ள போர் வருணனைகளில் இரண்டை விளக்குக.
7. இந்நூல் கோச்செங்கணான் மனத்தை எங்ஙனம் மாற்றியது?
8. ‘தமிழறிந்த புலவரைச் சிறை செய்தது தாயைச் சிறை செய்ததாகுமன்றோ!’—சந்தர்ப்பம் கூறி விளக்குக.
9. புலவரும் புரவலனும் சிறைச்சாலையில் கண்ட காட்சி யாது? அவர் எங்ஙனம் வருந்தினர்?
10. பொய்கையார் கோச்செங்கணானுக்கு உணர்த்திய படிப்பினை யாது?

## மொழிப் பயிற்சி

I. பிரித்தெழுதுக :—சொற்சுவை, உலகாண்டவர், பெருஞ்சேதம், நற்றமிழ்ப்புலவர், நிலையெய்தினன், பேரவமானம், கருத்தழகு, செந்நிறம், கண்ணீர்.

II. சேர்த்தெழுதுக :—பொருள் + சுவை ; எட்டு + தோள் ; பெருமை + அரசர் ; எண் + அற்ற ; உள் + கருத்து ; அறிவு + ஈனம்.

III. அனலிடைப்பட்ட மெழுகென—இதுபோன்ற வேறு மூன்று உவமைத் தொடர்களைச் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக.

IV. சிறைச்சாலையில் நிகழ்ந்தவற்றைச் சிறைக் காவலன் தன் நண்பனுக்குக் கூறுவது போல் எழுதுக.

V. கீழ்க்கண்ட சொற்களில் உள்ள குற்றியலுகரங்கள் இன்ன தொடர் எனக் குறிக்க :

சிறப்பு, வரலாறு, நாற்பது, புனைந்து, சால்பு, உலகு, அஃது, கேடு, மெழுகு, மார்பு.

## இலக்கணம்

1. காட்சி, மாட்சி, ஆட்சி—இச்சொற்களை காக்ஷி, மாக்ஷி, ஆக்ஷி என எழுதுதல் தவறாகும். இவை தமிழ்ச் சொற்களே. இவற்றிற்குக் காண், மாண், ஆள் என்பன பகுதிகளாம்.

2. சுவர் என்னும் சொல்லுடன் வேற்றுமை உருபுகள் சேரும் போது, சுவர் + ஐ ; சுவரை, சுவர் + இல் ; சுவரில் என்றே வரும். இதற்கு மாறாகச் சுவற்றை என்றும் சுவற்றில் என்றும் எழுதுதல் தவறும்.

3. அரும்பு, போது, மலர், வீ—இவை நான்கும் பூவைக் குறிக்கும் சொற்களாம். எனினும் இவற்றின் பொருளில் நுட்பமான வேறுபாடு உண்டு. அரும்பு - செடியில் தோன்றிய மொட்டு ; போது - மலரும் பக்குவத்தில் உள்ள பூ ; மலர் - இதழ்கள் விரிந்த பூ ; வீ - உதிரும் நிலையிலுள்ள பூ.

தா, கொடு, ஈ—இச்சொற்கள் ஒரே பொருளுடையன. எனினும் இவற்றிடையே நுட்பமான வேறுபாடு உண்டு. தா - உயர்ந்தோன் தாழ்ந்தவனைப் பார்த்துக் கேட்கும் சொல்; கொடு - ஒரே நிலையிலுள்ளோர் கேட்கும் சொல் ; ஈ - தாழ்ந்தவன் உயர்ந்தவனைப் பார்த்துக் கேட்கும் சொல்.

இங்ஙனமே, நுட்பமான வேறுபாட்டுடன் ஒரு பொருளைக் குறித்து வழங்கும் சொற்களை அறிந்து குறித்து வைத்துக் கொள்க.

# 4. எழுத்துக் கலை

ஒரு நாட்டின் உயர்ந்த நாகரிகத்துக்கு அடையாளம் அந்நாட்டில் வழங்கும் சிறந்த மொழியே யாகும். மொழி மக்கள் தம் கருத்தை ஒருவருக்கு ஒருவர் அறிவித்துக் கொள்வதற்கு ஏற்ற கருவியாய் உள்ளது. மக்கள் தனித்து வாழாமல் கூட்டம் கூட்டமாகவே வாழும் இயல்புடையவர்கள். எனவே ஒருவருடைய உதவி மற்றவர்க்கு இன்றியமையாததாம். ஒருவர் கருத்தை உணர்ந்து மற்றவர் நடந்து கொள்வதற்கு மொழியே உற்ற சாதனமாயிருக்கிறது. மொழி என்ற ஒன்றில்லாவிட்டால் மனித நாகரிகம் இப்போது எவ்வாறிருக்கும் என்று சிந்தித்துப் பாருங்கள் !

மொழி மக்களின் பழக்க வழக்கங்களிலிருந்து இயற்கையில் தோன்றியது. மக்களின் அறிவும் நாகரிகமும் வளர வளர மொழியும் வளர்ச்சியடைந்து வளம் பெற்றது. மொழி தோன்றிய நெடுங் காலத்துக்குப் பின்பே எழுத்து தோன்றியது. எழுத்தில் இரு வகையுண்டு. நாம் பேசும் மொழியில் ஒவ்வோர் ஓசையைக் குறிக்கும் ஒலிக்கு **ஒலி எழுத்து** என்பது பெயர். அந்த ஓசையைக் குறிக்க வரிவடிவில் உள்ள அடையாளத்துக்கு **வரி எழுத்து** என்பது பெயர். வரிவடிவத்தில் எழுதப் பட்டபின்பே எழுத்து என்று பெயர் அமைந்தது. எழுதப் படுவதால் அஃது எழுத்து என்னும் காரணப் பெயர் பெற்றது.

எழுத்தே மொழியின் உயிர்நிலை. எழுத்துக்கள் இன்றேல் புத்தகங்கள் உண்டோ? மாணவர் உளரோ? பள்ளிகளையும் ஆசிரியரையும் காண இயலுமோ? உலகில் மனிதன் கண்டறிந்துள்ள பலவகையான அற்புதங்களுக்கும் எழுத்தே அடிப்படையன்றோ? தந்தி, அச்சு போன்ற சாதனங்களையும், ஆகாய விமானம், படக் காட்சி, அணுகுண்டு போன்ற அதிசயங்களையும் மனிதன் கண்டறிந்தது எழுத்தின் துணையாலன்றோ? நம் முன்

ஞோர்கள் அரும்பாடுபட்டுக் கண்டறிந்த உண்மைகளையும், உலகிற்கு உதவியாக வழங்கிய இலக்கியங்களையும் நாம் எழுத்தின் உதவியில்லாமல் அறிந்து இன்புற்றிருக்க முடியுமா? எழுத்து இல்லாவிட்டால் நாமெல்லோரும் அறியாமையாம் இருளில் ஆழ்ந்து கிடப்போமன்றோ?

இனி இத்தகைய சிறப்பு வாய்ந்த எழுத்து எங்ஙனம் தோன்றியது என்று கவனிப்போம். பண்டைக் கால மக்கள் பிறருடன் வாணிகம் செய்யத் தொடங்கியபோது எழுத்தின் இன்றியமையாமையை உணர்ந்தனர். வாணிகத்தில் கடன் கொடுத்து வாங்க நேருமன்றோ? அங்ஙனம் கொடுத்த பொருளைப் பற்றிக் குறித்து வைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அதற்கு ஓர் அடையாளம் வேண்டும் என்று மனிதன் ஆராயத் தொடங்கினான். அந்த ஆராய்ச்சியின் பயனாலேயே எழுத்து முறை கண்டு பிடிக்கப்பட்டது. முதன் முதலில் தற்போதுள்ளது போன்று ஒவ்வோர் ஓசையையும் குறிக்க ஓர் எழுத்து கண்டறியப்படவில்லை. ஒவ்வொரு சொல்லையும் குறிப்பதற்கு ஓர் அடையாளமே கண்டறியப்பட்டது.

எழுத்து தோன்றியதற்கு முன்பே மனிதன் சித்திரம் வரையக் கற்றிருந்தான். அத்தகைய சித்திரங்களே முதலில் ஓசையைக் குறிக்கும் அடையாளங்களாக விளங்கின. இவ்வகை எழுத்துக்கள் **சித்திர எழுத்துக்கள்** என வழங்கப்பட்டன. முதலில் இந்த எழுத்துக்கள் குழந்தைகள் ஓவியம் வரைவதுபோல அழகில்லாமலேயே விளங்கின. பின்னர், படிப்படியாக மக்கள் அழகிய முறையில் எழுதக் கற்றுக் கொண்டனர்.

மேலே கூறப்பட்ட எழுத்துக்களை ஒவ்வொருவரும் தத்தம் கருத்தைக் குறிக்கும் அடையாளங்களாகவே முதலில் கண்டறிந்தனர். அதனால் சிறிது குழப்பம் ஏற்பட்டது. ஒருவன் தன் கருத்தைக் குறிப்பதற்காக ஏற்படுத்திய அடையாளம் மற்றொருவனுக்கு வேறு கருத்தைக் குறிக்கும் அடையாளமாக இருந்தால் அதனால் துன்பமே உண்டாகுமன்றோ? ஒரு தலைவன் மற்றொருவனை விருந்துக்கு வருமாறு வரைந்தனுப்பிய அடையாள எழுத்து

மற்றவன் வழக்கத்தில் போருக்குரிய அடையாளமாக இருந்தால் அதனால் விருந்துக்குப் பதில் போர் மூளு மன்றோ? எனவே அந்த அடையாள எழுத்துக்கள் எல்லோர்க்கும் பொதுவாக இருக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அறிஞர்கள் சிலர் கூடி எந்தெந்த அடையாளங்கள் எவ்வெழுத்துக்களைக் குறிப்பன என்று முடிவு செய்தனர். இங்ஙனம் பல குழுவினர் ஒன்றுபட்ட பின்னரே ஒரு நாட்டிற்குப் பொதுவாகிய எழுத்து தோன்றியது.

முதலில் ஒவ்வொரு சொல்லையும் குறிக்கும் அடையாளங்களாகத் தோன்றிய, சித்திர எழுத்துக்கள் நாளடைவில் ஒரு சொல்லில் உள்ள ஒவ்வோர் ஓசையையும் குறிக்கும் அடையாளங்களாக மாறலாயின. உலகில் உள்ள எல்லாப் பொருள்களையும் குறிக்கும் சொற்களுக்கு ஒவ்வோர் அடையாளம் அமைப்பதென்றால் அது மிகவும் கடினமான செயலன்றோ? ஆதலால் ஒவ்வோர் ஓசைக்கும் ஒவ்வொரு வரி வடிவம் இருந்தால் எழுத்து சுருக்கமாக அமையும் என்று நம்முன்னோர்கள் எண்ணி அதன்படியே அமைத்தனர். அதனாலேயே நம் தமிழ் மொழி இருநூற்று நாற்பத்தேழு எழுத்துக்களைக் கொண்ட அழகிய மொழியாக இருக்கின்றது.

சித்திர எழுத்துக்களால் ஆகிய தமிழ் நூல்கள் கிடைக்கவில்லை. எகிப்தியர்கள் இத்தகைய அழகிய பட எழுத்துக்களாலேயே தங்கள் முதற் புத்தகங்களை ஆக்கினர். இவ்வெழுத்துக்களுக்கு **ஹிரோக்ளிபிக்ஸ்** என்பது பெயர். அவர்கள் தம் எழுத்துக்களைத் தூண்களிலும், கோயிற் சுவர்களிலும், சமாதிகளிலும் தீட்டினர். அவர்களுடைய புத்தகங்கள் பட்டுத் துணியிலும் **பாபிரஸ்** என்னும் ஒரு வகைப் புல்லிலும் அமைக்கப்பட்டன. பழங்கால மக்களாகிய எகிப்தியர்களுடைய எழுத்துக்களடங்கிய கற் பாறைகளும், பாபிரஸ் சுருள்களும், மெல்லிய தோல்களும் இன்று கிடைத்துள்ளன. அவற்றை ஆராய்ந்த அறிஞர்கள் கோழிக் குஞ்சு, ஆந்தை, பாதத்துடன் கூடிய கால் முதலியவை சில

குறிப்பிட்ட எழுத்துக்களைக் குறிப்பன என்று அறிந்துள் ளனர். அதில் காணப்படும் கையை உயர்த்திய மனிதனின் உருவம் கடவுள் வணக்கத்தைக் குறிப்பதாகக் கூறுகின் றனர். சுமேரியர் என்ற ஓர் இனத்தார் களிமண்ணுல் தகடுகள் செய்து அவற்றில் தம் நூல்களை எழுதிச் சூளையி லிட்டு வைத்துக் காப்பாற்றி வந்தனர். இச்சுமேரியர்க ளிடமிருந்து பாபிலோனியரும், அவர்கள் மூலம் அசிரிய மக்களும் எழுத்துக்களைக் கற்றுக் கொண்டனர். அசிரிய மக்களின் தலைநகரில் ஆயிரக்கணக்கான களிமண் புத்த கங்கள் அடங்கிய நூல் நிலையம் மிகச் சிறந்த முறையில் விளங்கியதாம். இங்ஙனம் இவர்களிடம் வளர்ந்த எழுத்து முறையே சிறிது சிறிதாக மேல்நாடு முழுதும் பரவ லாயிற்று.

இவ்வாறு மேல் நாட்டவர் எழுத்து முறையை அறி வதற்கு முன்பே நம் நாட்டில் எழுத்துக் கலை மிக்க வளர்ச்சியடைந்திருந்தது என்பது தெரிகிறது. நம் நாட் டில் மரப்பட்டைகளிலும், மலர்களிலும், கற்பாறைகளிலும் செப்புத் தகடுகளிலும் எழுதி வந்தனர். பனை ஓலைகளையே மிகுதியாக எழுதுவதற்குப் பயன்படுத்தினர். நம் நாட்டுப் பழைய சங்க இலக்கியங்கள் யாவும் பனை ஓலைகளிலேயே எழுதப்பட்டன. இப்போதும் மிகப் பழைய ஓலைச் சுவடி களைத் தஞ்சாவூரிலுள்ள சரஸ்வதி மகால் என்னும் புத்தக நிலையத்திலும், மதுரைத் தமிழ்ச்சங்கத்திலும், சென்னைப் பல்கலைக் கழக நூல் நிலையத்திலும் காணலாம். மாதவி கோவலனைப் பிரிந்து வருந்தியபோது, தன் துன் பத்தைத் தாழை மடலில் முல்லை அரும்பைச் செம்பஞ்சுக் குழம்பில் தோய்த்து எழுதி அனுப்பினுள் என்று சிலப் பதிகாரம் கூறுகிறது. இதனுல் பண்டைக் காலத்தில் எழுத்து முறையும் அதற்குப் பயன்பட்ட மை, எழுது கோல் முதலியனவும் இன்னவை என விளங்கும். நாம் கோயில்களில் காணும் கல்வெட்டுக்கள் கல்லில் செதுக்கிய எழுத்து முறையை விளக்கும். கல்லிலும் செப்பேட்டிலும் செதுக்கிய அவ்வகை எழுத்துக்கள் வட்டெழுத்துக்கள் எனக் கூறப்படுகின்றன.

தற்போது வழக்கிலுள்ள காகிதமும் அச்சும் கண்டு பிடிக்கப்பட்டவுடன் எழுத்துக் கலை மிகவும் வளர்ச்சி யடைந்துள்ளது. ஓலையில் எழுதுவதற்கு நம் நாட்டில் எழுத்தாணி என்ற ஒருவகைக் கருவியைப் பயன் படுத்தினர். கற்களிலும் செப்புத் தகடுகளிலும் கூர்மை யான கருவிகளைக் கொண்டு எழுத்தின் உருவங்களைச் செதுக்கி அமைத்தனர். எகிப்தியர் பாபிரஸ் சுருள் களிலும், தோலிலும் எழுதுவதற்கு நீண்ட கூர்மையான நாணல் குச்சிகளைப் பயன்படுத்தினர் என்று தெரி கின்றது. அவர்கள் மரங்களின் பால்களையும் வேறு சில இரசாயனப் பொருள்களையும் எழுதும் மையாகப் பயன்படுத்தினராம். பதின்மூன்ரும் நூற்ருண்டுக்குப் பின்னரே இறகு பேனுக்கள் வழக்கில் வந்தன. இவற்றை அடிக்கடி கத்தியால் நுனியில் கூர்மையாகச் சீவி மையில் தோய்த்து முற்கால மக்கள் எழுதுவது வழக்கம். 1819-ஆம் ஆண்டில் இங்கிலாந்தில் வாழ்ந்த ஜேம்ஸ் பெர்ரி என்பவர் முதன் முதலில் எஃகு முனை யுடைய பேனுவைக் கண்டறிந்தனர். அக்காலத்தில் பேனுக்கள் கையாலே தயாரிக்கப் பெற்றன. அதனுல் அவை மிக விலையுயர்ந்தனவாக இருந்தன. பின்னர் அப் பேனுக்கள் பலவாறு முன்னேற்றமடைந்து உலகெங்கும் பரவலாயின. இன்று பற்பல வகையான ஊற்றுப் பேனுக் கள் தோன்றியுள்ளன. எழுதுகோலால் மையில் தோய்த்து எழுதும் சிரமமின்றி நாம் இத்தகைய பேனுக்களால் மிக விரைந்து எழுதுகின்ருேம்.

அச்சுக் கலை தோன்றி வளர்ந்த பிறகு எழுத்துக் கலை பெற்ற வளர்ச்சி அளவிடக் கூடாததாம். பலவித மான அழகிய கண்ணைக் கவரும் எழுத்துருவங்கள் இப் போது தோன்றியுள்ளன. இத்தகைய அச்சு வித்தை யைக் கண்டறிந்தவர் **ஜான் கூடன் பர்க்** என்ற ஜெர்மானியராவார். அவர் ஒரு சமயம் தாம் மணம் செய்து கொள்ள விரும்பிய ஒரு பெண்ணின் பெயரை ஈரமான மரப் பட்டையில் அழகாகச் செதுக்கி அதனை ஒரு தோலில் சுற்றி வைத்திருந்தார். மறு நாள் அதனை

அப்பெண்ணினிடம் கொடுக்க எடுத்தபோது ஈரமான மரப்பட்டையில் செதுக்கப்பட்டிருந்த அவ்வெழுத்துக்கள் அதனைச் சுற்றி வைத்திருந்த தோலில் பதிந்திருக்கக் கண்டு வியப்புக் கொண்டார். இம்முறையிலேயே மரங்களில் எழுத்துக்களைச் செதுக்கி அவற்றின்மேல் மையைப் பூசி அச்சிட முடியுமா என்று ஆராய்ந்து பார்த்தார். அவர் முயற்சி வெற்றி பெற்றது. அவர் முதன் முதலில் மர அச்சுக்களின் உதவியால் கிறித்தவ வேதமாகிய விவிலிய நூலைப் பக்கம் பக்கமாக அச்சிட்டார்.

பின்னர் அக்கலை சிறிது சிறிதாக வளர்ந்தது. தற்போது ஈயத்தால் சிறியனவும் பெரியனவுமாகிய அழகிய எழுத்துக்களை வார்க்கின்றனர். அவற்றைக் கோத்துக் கண்ணைக் கவரும் அழகிய நூல்கள் வெளியிடப்படுகின்றன. அச்சுக்கோக்கும் சிரமமும் இல்லாமல் இயந்திரங்களின் உதவியால் தாமே அச்சுக் கோத்து ஒரு மணிக்குள் பல்லாயிரக் கணக்கான பிரதிகளை அச்சிடக் கூடிய 'லைனோ டைப்', 'மானோ டைப்' என்ற அதிசயமான இயந்திரங்களும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இத்தகைய இயந்திரங்களின் உதவியால்தான் நம் நாட்டில் பல்லாயிரக் கணக்கில் செய்தித் தாள்கள் விரைவாகவும் அழகாகவும் அச்சிடப்படுகின்றன. இன்னும் இத்துறையில் பல விதமான அற்புத சாதனங்களும் தோன்றக் கூடும்.

இதுவரை கூறியவற்றால் எழுத்துக் கலை தோன்றி வளர்ந்ததை ஒருவாறு நீங்கள் அறிந்து கொள்ளலாம். அழகிய கையெழுத்தே உயர்ந்த கல்விக்கு அடையாளமாகும். ஒருவனுடைய கையெழுத்தின் அழகைக் கொண்டே அவனுடைய குணங்களை அறிந்து கொள்ளலாம் என்று அறிஞர்கள் கூறுகின்றனர். ஆதலால் நீங்கள் அழகாகவும், தெளிவாகவும் எழுதுவதில் கவனம் செலுத்த வேண்டும். அதுவே நீங்கள் எழுத்துக் கலை வளர்ச்சிக்குச் செய்யும் தொண்டாகும்.

## அருஞ்சொல் விளக்கம்

சாதனம் - துணை ; இன்றியமையாமை - அவசியம் ; மூளும் - உண்டாகும் ; சிரமம் - துன்பம் ; லைனோ டைப் - உருகிய ஈயத்தில் வரி வரியாக எழுத்துக்களை அச்சிட உதவும் இயந்திரம் ; மானோடைப் - ஈயத்தில் எழுத்துக்களைத் தனித் தனியாக அச்சிட உதவும் இயந்திரம்.

## வினாக்கள்

1. மொழி நாகரிகம் வளர்வதற்கு எங்ஙனம் உதவுகிறது ?
2. எழுத்துக்கள் எத்தனை வகைப்படும் ? அவற்றுள் முன் தோன்றியது எது ?
3. எழுத்து தோன்றியிராவிடில் நாமனைவரும் அறியாமையாம் இருளில் ஆழ்ந்திருப்போம்—இதனை ஆராய்க.
4. சித்திர எழுத்துக்கள்—குறிப்பு வரைக.
5. எகிப்தியரின் பட எழுத்துக்களைப் பற்றி ஆராய்ச்சியாளர் கண்டறிந்தன யாவை ?
6. மேனாடுகளில் எழுத்து முறை எங்ஙனம் பரவியது ?
7. நம் நாட்டில் முற்காலத்தில் மக்கள் எவற்றின்மீது எழுதினர் ?
8. எஃகு முனையுடைய பேனாக்களை முதலில் தோற்றுவித்தவர் யார்? பேனாக்களின் வளர்ச்சியை விவரிக்க.
9. அச்சு வித்தையின் தோற்றத்தை விளக்குக.
10. 'லைனோ டைப்'—குறிப்பு வரைக.

## மொழிப் பயிற்சி

I. பிரித்து எழுதுக :—கண்டறிந்துள்ள, துணையாலன்றோ, இன்புற்றிருக்க, நூற்றாண்டு.

II. சொந்த வாக்கியங்களில் பயன்படுத்துக :—இன்றியமையாமை, அரும்பாடுபட்டு, சாதனங்கள், படிப்படியாக, சிரமமின்றி, கண்ணைக்கவரும்.

III. கீழ்க்கண்ட சொற்கள் தவறாக வழங்கப்படுகின்றன. அவற்றைத் திருத்தி எழுதுக :—

எண்ணை, அருகாமையில், விற்க்கப்படும், உத்திரவு, இடது பக்கம், முழங்குதல், கோர்த்தல், கோர்வை, வேஷ்ட்டி, வயறு, கேழ்வி, ரொம்ப.

IV. முறுவல், சிரிப்பு ; குளம், தடாகம், சுனை ; ஒலி, முழக்கம் ; இயம்பு, அறை ; காணுதல், நோக்குதல்—இவற்றிடையே காணப்படும் நுட்பமான பொருள் வேறுபாட்டைக் கூறுக.

## இலக்கணம்

செய்தான், செய்கிறான், செய்வான்—இச்சொற்கள் முறையே இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய முக்காலங்களைக் காட்டுகின்றன. இவற்றைக் கீழ்க்கண்டவாறு பிரிக்கலாம் :

செய்தான்—செய் + த் + ஆன் ; செய்கிறான்—செய் + கிறு + ஆன் ;
செய்வான்—செய் + வ் + ஆன்.

இவற்றுள் த், கிறு, வ் என்பன முதலிலுள்ள பகுதிக்கும் இறுதியிலுள்ள விகுதிக்கும் இடையில் வந்துள்ளமையால் இடைநிலை எனப்படும்.

படித்தான், உண்டான், பெற்றான், ஓடினான்—த், ட், ற், இன்—இறந்தகால இடைநிலைகள்.

நடக்கிறாள், படிக்கின்றாள், செய்யாநின்றாள்—கிறு, கின்று, ஆநின்று—நிகழ்கால இடைநிலைகள்.

கற்பான், ஓடுவான்—ப், வ்—எதிர்கால இடைநிலைகள்.



# 5. முதல் சுதந்திரப் போர்

இன்று நம் நாடு உரிமை பெற்ற திருநாடாகத் திகழ்கின்றது. ஏறக்குறைய முந்நூறு ஆண்டுகளாக நம்மைப் பிணித்திருந்த அடிமைத்தளை தகர்ந்தது. இத்தகைய உரிமைக்கு நாம் செய்த தியாகங்கள் அளவற்றனவாம். அந்நியர் ஆட்சி நம் நாட்டில் பரவத் தொடங்கியதை அறிந்ததிலிருந்தே நம் நாட்டு வீர வேந்தர்கள் பலர் அதனை எதிர்த்தனர். எத்தனையோ இடங்களில் இத்தகைய உரிமைப் போர்கள் நடந்தன. அந்நியர் ஆட்சியை எதிர்த்து உரிமைப் போர் நடத்தியவர்களில் வீரபாண்டியக் கட்டபொம்மு துரையும் அவர் தம்பி ஊமைத்துரையும் முதன்மையாகக் குறிக்கத்தக்கவர்களாவர். அவர்கள் நடத்திய வீரப்போரே நம் நாட்டுச் சுதந்திர வரலாற்றில் முதற்போராகும். அப்போராட்டமே பற்பல சமயங்களில் பலவிதமாக மாறி இன்றைய விடுதலைக்குக் காரணமாயிற்று எனலாம்.

வீர பாண்டியர் திருநெல்வேலி மாவட்டத்தைச்

சார்ந்த பாஞ்சாலங்குறிச்சியை ஆண்ட அரசராவர். அவர் முன்னேர்கள் பலரும் பேராற்றல் வாய்ந்தவர்கள். முதலில் பாண்டிய அரசரின் படைவீரராக அமர்ந்த அவர்கள் தங்கள் ஆற்றலாலேயே நாட்டை ஆளும் உரிமை பெற்றனர். அத்தகைய வீரர் பரம்பரையில் தோன்றியவரே வீரபாண்டியக் கட்டபொம்மு துரையாவர். அவர் 1790-ஆம் ஆண்டில் அரசாட்சியை ஏற்ருர். அவருடைய ஆட்சி நல்லாட்சியாக விளங்கியது. நாட்டு மக்களின் நன்மையையே கருதி ஆண்ட அவரிடம் குடிமக்கள் பேரன்பு கொண்டிருந்தனர். அவர் நா அசைந்தால் நாடு அசையும். அவருக்காகத் தம் உயிரையே வழங்க மக்கள் தயாராக இருந்தனர்.

சகோதரர்கள் இருவரும் மிக்க நாட்டுப்பற்று உடையவர்கள்; மானமே வாழ்வாகக் கொண்டவர்கள்; வீரத்தையே அணியாகப் பூண்டவர்கள்; உடல் வலிமையும் தோளுரமும் வாய்ந்தவர்கள்; படைப் பயிற்சி மிக்கவர்கள். இத்தகைய பேராற்றல் வாய்ந்த அவர்கள் அந்நியருக்குப் பணிய இசைவரோ? ஆதலால் ஆர்க்காட்டு நவாபுக்காக வரி வசூலிக்கும் உரிமையைப் பெற்றிருந்த கிழக்கிந்தியக் கம்பெனியார்க்கும் அவர்கட்கும் பகைமை மூண்டது. வீரபாண்டியர் அவர்கட்கு அடங்கித் திறை கட்ட விரும்பவில்லை. "நம் நாட்டில் வாணிகம் செய்து பிழைக்கவந்த ஒரு கூட்டத்தார் நம்மை அடக்கி ஆள்வதா? இதைவிட மானக்கேடு வேறு உண்டோ?" என்று அவர் உள்ளம் கொதித்தார். தந்திரத்தால் நாட்டைக் கவர முயலும் அந்நியரை நாட்டைவிட்டு ஓட்ட வேண்டும் என்று முடிவு செய்தார். ஆனல் வீரபாண்டியரின் ஆற்றலிலும் ஆட்சியிலும் பொருமைகொண்ட சிற்றரசர்கள் சிலர் அந்நியருடன் சேர்ந்துகொண்டு அவர்கள் துணையால் வீரபாண்டியரை அழித்துவிட முயன்றனர். அவர்களுடைய இழிகுணத்தை என்னென்று கூறுவது!

வீரபாண்டியரின் அலட்சியத்தை அறிந்த கிழக்கிந்தியக் கம்பெனியார் ஆலன் என்பவரைத் தூதாக அனுப்பி வீரபாண்டியரை வரி கட்டுமாறு கேட்டனர். வீரபாண்டி

யர் பெருஞ்சினம் கொண்டார். "வானம் பொழியுது பூமி விளையுது; மன்னவன் காணிக்குக் கிஸ்தி ஏது?" என்று அவர் வீரமுழக்கம் செய்தார்; "வரி வேண்டுமானால் வாள் முனையில் கிடைக்கும்," என்று கூறி அனுப்பினார். அச்செய்தியை அறிந்த கிழக்கிந்தியக் கம்பெனியாரிடம் கலெக்டர் பதவியை வகித்த **ஜாக்ஸன் துரை** தம்மை இராமநாதபுரத்தில் உடனே வந்து காணவேண்டுமென்று வீரபாண்டியருக்குச் செய்தி அனுப்பினார். வீரபாண்டியர் முதலில் அதற்கு இணங்க மறுத்தார்; எனினும் ஜாக்ஸனின் கருத்தை அறிந்துகொள்ள விரும்பித் தம் பரிவாரங்களுடன் இராமநாதபுரம் சென்றார். ஜாக்ஸன் அவரை இராமநாதபுரத்தில் இருந்து வரவேற்காமல் இருபத்து மூன்று நாட்கள் சுமார் நானூறு மைல் தொலைவு சுற்றி அலையச் செய்தார். அப்போதும் வீரபாண்டியர் முன்வைத்த காலைப் பின் வைக்காமல் அவரைத் தொடர்ந்து சென்று இறுதியாக இராமநாதபுரத்தில் அவரைக் கண்டார்.

வீரபாண்டியரை நேரில் கண்ட ஜாக்ஸன் துரை சீறி அவர்மேல் பல குற்றங்களைச் சாட்டி. அவரைச் சிறை செய்ய முயன்றார். அவரது எண்ணத்தை அறிந்த வீரபாண்டியர் தம் தம்பியருடன் அவ்விடத்தைவிட்டு வெளியேறினர். ஜாக்ஸன் அவரைத் தடுத்தார். வீரபாண்டியர் அவரைக் குப்புற வீழ்த்தினார். உடனே மற்றொருவன் முன்வந்து அவரை வழிமறித்தான். ஊமைத் துரையின் வாள் அவன் உயிரை வாங்கியது. இதற்குள் இறுதிறப் படைகட்கும் பெரும்போர் மூண்டது. பாஞ்சாலங்குறிச்சி வீரர்கள் அவர்களை வென்று வெற்றிவீரராய்ப் பாஞ்சாலங்குறிச்சியை அடைந்தனர். ஆனால் வீரபாண்டியரின் அமைச்சர் **சிவசுப்பிரமணியப் பிள்ளை** என்பவர் ஆங்கிலேயப் படையால் சிறை செய்யப்பட்டார்.

வீரபாண்டியரின் வெற்றியால் அவமானம் அடைந்த ஜாக்ஸன் அவரைப்பற்றிப் பல குற்றங்களைச் சாட்டிக் கம்பெனித் தலைவருக்கு எழுதினார். கம்பெனியார் எல்லாவற்றையும் நன்கு விசாரித்து ஜாக்ஸன் செயலே தவறு

னது என்று கண்டனர்; அதனால் அவரைப் பதவியிலிருந்து விலக்கி **லூஷிங்டன்** என்பவரைக் கலெக்டராக நியமித்தனர்; அமைச்சர் சுப்பிரமணியப் பிள்ளையையும் விடுதலை செய்தனர். புதிய கலெக்டரும் வீரபாண்டியரிடம் வரி வசூலிக்கவே முயற்சி செய்தார். ஆனால் வீரபாண்டியரோ எதற்கும் அஞ்சாமல் கம்பெனியாரின் ஆணையை அலட்சியப்படுத்தியே வந்தார். இவ்வாறு ஏழாண்டுகளாகத் திறை கட்டாமல் வெற்றி வீரராக விளங்கிய வீரபாண்டியரை அடக்கினால் அல்லாமல் தங்கள் ஆட்சி நிலைக்காது என்று கண்ட கம்பெனியார் பாஞ்சாலங் குறிச்சியைத் தாக்கப் பெரும் படை திரட்டினர். **மேஜர் பானர்மென்** தலைமையில் படை புறப்பட்டுப் பாஞ்சாலங்குறிச்சியை அடைந்தது.

1799-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் ஐந்தாம் நாள் இந்தியச் சுதந்திர வரலாற்றில் குறிப்பிடத்தக்க பொன்னாளாகும். அன்றுதான் இந்திய நாட்டின் முதல் சுதந்திரப் போர் துவங்கியது. கம்பெனியார் படைக்கும் பாஞ்சாலங்குறிச்சி வீரர்கட்கும் பெரும் போர் மூண்டது. ஆங்கிலேயர்கள் பெரிய பீரங்கிகளைக்கொண்டு பாஞ்சாலங் குறிச்சியைத் தரைமட்டமாக்க முயன்றனர். நாட்டுப் பற்றுக்கொண்ட பாஞ்சாலங்குறிச்சி வீரர்களோ, “உயிரை வழங்கியேனும் நாட்டைக் காப்போம்!” என்று புலியெனச் சீறிப் போரிட்டனர். எவ்வளவு முயன்றும் பயனென்ன! வலிய பீரங்கிப் படைக்கு எதிரே வேலும் வாளும் என்செயும்? அதனால் வீரபாண்டியரும் அவர்தம் தம்பியரும் மற்றும் சிலரும் இரவில் ஒருவரும் அறியாமல் கோட்டையை விட்டு வெளியேறினர். ‘காகம் பறவாது கட்டபொம்மு சீமையிலே’ என்ற புகழுக்கு எடுத்துக்காட்டாக விளங்கிய பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை பகைவர் வசமாயிற்று. எனினும் வீரபாண்டியரும் ஊமைத்துரையும் தப்பிச் சென்றமை பகைவர்க்குப் பெருஞ் சினத்தை உண்டாக்கியது. அதனால் அவர்கள் அக்கோட்டையை இடித்துத் தகர்த்துத் தரைமட்டமாக்கி விட்டனர்.

இங்ஙனம் நாட்டைவிட்டு வெளியேறிய வீரபாண்டிய ரும் ஊமைத்துரையும் பிறர் ஒருவரும் அறியாவகையில் இரவிலேயே நெடுந்தூரம் சென்றனர். இடையில் இருளில் வழி தெரியாமையால் ஒருவரை விட்டு ஒருவர் பிரிய நேர்ந்தது. வீரபாண்டியர் பல இடங்களில் மறைந்து தங்கி இறுதியாகப் புதுக்கோட்டை யரசனை அடைந் தார். புதுக்கோட்டையரசன் வீரபாண்டியரை வரவேற்று உபசரித்தான். அவன் அவருக்கு உதவி செய்வதாகக் கூறினன். வீரபாண்டியரும் அதனை நம்பி அவனரண் மனையில் விருந்தினராகத் தங்கியிருந்தார். அடைக்கல மாக வந்தவரை ஆதரிக்கும் தமிழர் மரபை மறந்த அவ் வரசன் வீரபாண்டியரைப் பகைவரிடம் காட்டிக்கொடுத்து அதன் மூலம் அவர்கள் தயவைப் பெற விரும்பினன். என்னே அவன் இழிதகைமை! புதுக்கோட்டை மன்னன் துரோகத்தினல் வீரபாண்டியரைப் பகைவர் உறக்கத்தில் சிறைப்படுத்தினர்; சிங்கத்தைச் சிறு நரிகள் வளைத்தது போல வஞ்சனையால் சிறைப்படுத்திய வீரபாண்டியரைத் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள கயத்தாறு என்னும் ஊருக்கு அழைத்துச் சென்று காவலில் வைத்தனர்; மாவீரராகிய ஊமைத்துரையையும் பெரும் படையுடன் சென்று தேடிப் பிடித்து அவருடன் சமாதானம் செய்து கொள்வதாக நயவஞ்சகமாகப் பேசிச் சிறை செய்தனர்.

வீரபாண்டியரை எங்ஙனமேனும் ஒழிக்க நினைத்த கம்பெனியார் ஒரு போலி விசாரணை நடத்தினர். வீர பாண்டியர்மேல் பல குற்றங்களைச் சாட்டி அவருக்குத் தூக்குத் தண்டனை விதித்தனர். என்ன அநியாயம்! இந்தக் காட்சியைக் கண்டு காட்டிக்கொடுத்த சிற்றரசர் கள் சிறிதும் மானமோ உணர்ச்சியோ இன்றித் தலை குனிந்து நின்றனர். அவர்களைக் கண்ட வீரபாண்டியர் அவர்கள் நிலைக்கு மிகவும் இரங்கி உளம் துடித்தார்; பாழும் மண்ணாசையல்லவா அவர்களைப் பஞ்சைகளாக் கிற்று என்று மனம் புழுங்கினர்; தமிழ் மன்னர்களிடம் ஒற்றுமை இருந்திருந்தால் அந்நியர் கொட்டம் அடங்கி யிருக்குமே என்று சிந்தை நொந்தார். பலப்பல எண்ணிப்

பயன் என்ன? தாய் நாட்டின் விடுதலைக்காக—தமிழரின் மானத்தைக் காப்பதற்காக வீரப்போர் புரிந்த வீரபாண்டியர் தமிழர்கள் கண்ணெதிரே—பொங்கிவரும் கண்ணீருக்கிடையே 16—10—1799 அன்று கயத்தாற்றில் ஒரு புளிய மரத்தில் தூக்கிலிடப்பட்டார். என்ன கொடுமை! அதைப் பார்த்தவர்கள் நெஞ்சம் பதறியது! உள்ளம் கொதித்தது! ஆனால் ஆங்கிலேயரின் நயவஞ்சகம் வெற்றி பெற்றது. அவர்கள் உள்ளம் பூரித்தது.

தம் தமையன் தூக்கிலிடப்பட்டதறிந்த ஊமைத்துரையின் உள்ளம் எரிமலையாயிற்று. கண்கள் கண்ணீர் சொரிந்தன. ஆங்கிலேயர் கூட்டத்தைப் பழிக்குப்பழி வாங்கத் துடிதுடித்தார் அவர். சிறையில் கிடக்கும் அவரால் யாது செய்ய இயலும்? தம் செயலற்ற நிலையை எண்ணி எண்ணி உள்ளம் புழுங்கித் துடித்தார் ஊமைத்துரை. ஆனால் வெளியே இருக்கும் நாட்டுப்பற்று மிக்க பாஞ்சாலங்குறிச்சி மக்கள் வாளா இருக்கவில்லை. அவர்கள் இரகசியமாகக் கூடிச் சூழ்ச்சி செய்து தக்க சமயம் பார்த்துச் சிறைச்சாலையைத் தாக்கி ஊமைத்துரையை விடுதலை செய்தனர். எதிர்பாராத வகையில் ஏற்பட்ட இத்தாக்குதலால் ஆங்கிலேயர் திகைத்தனர். அதனால் எதிர்த்த ஆங்கிலேயர் படைகளை எளிதாக வென்று ஊமைத்துரை தம் பரிவாரங்களுடன் பாஞ்சாலங்குறிச்சியை வந்தடைந்தார்.

ஊமைத்துரை பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை தரைமட்டமாக்கப்பட்டது கண்டு வருந்தினார். செயல் வீரராகிய அவர் அதற்காக உளம் சோர்ந்தாரில்லை. தரைமட்டமான கோட்டையை ஒரே வாரத்தில் கட்டிமுடிக்க விரும்பினார். அவ்வளவுதான்! புறப்பட்டனர் ஆயிரக்கணக்கான வீரர்கள்; களிமண்ணுடன் கம்பஞ்சக்கையையும் கருப்பஞ்சாற்றையும் கலந்து பிசைந்து முன்னிலும் மிக்க வலிமையான கோட்டையை ஆறே நாட்களில் கட்டிமுடித்தனர். அவர்களுடைய ஆர்வத்தையும் ஊமைத்துரையிடம் அவர்கட்கிருந்த பேரன்பையும் என்னென்று புகழ்வது! கோட்டை முடிந்ததும் ஊமைத்துரை மீண்டும் போருக்கு

வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்துமுடித்துப் பழிக்குப் பழி வாங்கக் காத்திருந்தார்.

ஊமைத்துரை தப்பிச் சென்றதறிந்த கம்பெனியார் மீண்டும் பெரும் படையுடன் சென்று பாஞ்சாலங்குறிச்சியை அடைந்தனர். அவர்கள் கண்ட காட்சியை அவர்கள் நம்பவே இல்லை. மண்ணுய்க் கிடந்த இடத்தில் எழுந்து நின்ற மாபெரும் கோட்டையைக் கண்ட அவர்கள் திகைத்து நின்றனர்; இது மாயக் கோட்டையோ என வியந்தனர்; தமிழ் மறவர்களின் ஆற்றலைப் புகழ்ந்தனர்; ஆனாலும் அக்கோட்டையை அழித்தொழிக்கவே முயன்றனர். மூன்று நாட்கள் பெரும் போர் நடந்தது. மிகப் பெரிய பீரங்கிகளைக்கொண்டு குண்டுமாரி பொழிந்தனர். அவ்வளவையும் தாங்கிய அக்கோட்டையின் வலிமையைப் பகைவரே வியந்து பாராட்டினரென்ருல் அதன் அமைப்பை என்னென்று புகழ்வது! இறுதியாக மிக முயன்று கோட்டையைச் சில இடங்களில் தகர்த்தனர். தகர்த்த வழியே உள்ளே செல்ல முயன்ற கம்பெனிப் படைகளை உள்ளிருந்த வீரர்கள் கொன்று குவித்தனர். அதனுல் கம்பெனியார் நச்சுப் புகையைக் கோட்டைக்குள் செலுத்தினர். பாவம்! அப்புகையினுல் உள்ளிருந்தவர்கள் அனைவரும் மூச்சுத் திணறினர். பலர் மடிந்தனர். இனிமேல் கோட்டை நிலைக்காது என்று கண்ட ஊமைத்துரை தந்திரமாகச் சிலருடன் வெளியேறிவிட்டார். மீண்டும் கோட்டை தரை மட்டமாக்கப்பட்டது.

மறுபடியும் ஊமைத்துரை தப்பிச் சென்றதறிந்த கம்பெனியார் அவர் உயிருடன் உள்ளவரை ஆபத்துத் தான் என்று எண்ணி அவரைத் தேடித் திரிந்தனர்? அவரைக் கண்டுபிடித்துத் தருபவருக்கு 500 பொன் பரிசு அளிப்பதாகப் பறையறைந்தனர். இறுதியாக அவர் காளையார் கோயில் காட்டில் மறைந்து வசிப்பதறிந்து காட்டைச் சுற்றி முற்றுகையிட்டுப் போர் புரிந்தனர். ஊமைத்துரையினிடம் ஒரு சுருள் வாள் இருந்தது. அஃது இரண்டு பக்கமும் கூர்மையுடையது. அதை வீசினுல் பன்னிரண்டு அடிவரை நீண்டு சென்று பகைவர் தலை

களைச் சீவித் தள்ளும். ஊமைத்துரை அவ்வாளின் உதவியால் எண்ணற்றவரைக் கொன்று குவித்தார். அவருடைய அரிய ஆற்றலைக்கண்ட கம்பெனிப்படை அவரை நெருங்க முடியாமல் அஞ்சி ஒதுங்கியது. உடனே ஊமைத்துரை ஓடி ஒளிந்தார்.

மீண்டும் அவரைத் தேடும் வேலை தொடங்கியது. இம்முறை பகைவர் கொடுப்பதாகக் கூறிய பணத்திற்கு ஆசைப்பட்ட ஒரு பெண், அறியாமையினால் தன் வீட்டுத் திண்ணையில் படுத்து உறங்கிக்கொண்டிருந்த ஊமைத்துரையைப் பகைவரிடம் காட்டிக்கொடுத்துவிட்டாள். தமையனைப் போலவே தம்பியையும் உறக்கத்தில் சிறைப்படுத்திய மாவீரர்கள் அவரைப் பாஞ்சாலங்குறிச்சிக்குக் கொண்டுவந்தனர். அங்கிருந்த ஒரு மேட்டில் அண்ணனைப் போலவே தம்பியையும் தூக்கிலிட்டுக் கொன்றனர்.

நாட்டுக்காக வீரப் போர் செய்த கட்டபொம்மு சகோதரர்கள் அநியாயமாகத் துடிக்கத் துடிக்கக் கொல்லப்பட்டனர். ஏனென்று கேட்க அக்காலத்தில் தமிழகத்தில் ஆளில்லை. ஆனால் அவர்கள் வீரமரணம் வீண்போகவில்லை; கோழைகளைப் புலிகளாக்கிற்று; துரோகத்தின் கொடுமையை உணர்த்தி ஒற்றுமையின் அவசியத்தைப் போதித்தது; வருங்கால விடுதலைப் போருக்கு வழி காட்டியது. கட்டபொம்மு சகோதரர்கள் கண்ட கனவு காந்தியடிகளின் சத்தியாக்கிரகப் போரால் நனவாயிற்று. அவர்கள் செய்தது ஆயுதப் போர். அண்ணல் காந்தி கண்டது அஹிம்ஸைப் போர். ஆனால் ஆயுத பலமற்ற நம் நாட்டிற்கு அஹிம்ஸைப் போரே ஏற்றது என்று எடுத்துக் காட்டியது கட்டபொம்மு சகோதரர்களின் வீரமரணமேயன்றோ! ஆதலால் அச்சுதந்திர வீரர்களுக்கு நாம் என்றும் வீரவணக்கம் செய்யக் கடமைப்பட்டுள்ளோம். கட்டபொம்மு சகோதரர்கள் புகழ் வாழ்வதாக!

## அருஞ்சொல் விளக்கம்

உரிமை - சுதந்திரம்; உரிமை × அடிமை; பிணித்தல் - கட்டுதல்; கோழை - பயங்கொள்ளி; வரலாறு - சரித்திரம்; குறிச்சி - மலையை அடுத்துள்ள சிற்றூர்; உரம் - வலிமை; நா - நாக்கு; இசைதல் - சம்மதித்தல்; அலட்சியம் - அசட்டை; லட்சியம் × அலட்சியம்; காணி - நிலம்; கிஸ்தி - வரி; இறுதியாக - கடைசியில்; சீறி - கோபித்து; மறித்தான் - தடுத்தான்; இருதிறத்தார் - இரண்டு கட்சியினர்; துவங்கியது - ஆரம்பித்தது; வழங்கி - கொடுத்து; சீமை - நாடு; எடுத்துக்காட்டு - உதாரணம்; மரபு - வழக்கம்; இழிதகைமை - இழிவு; துரோகம் - வஞ்சனை; உறக்கம் - தூக்கம்; பஞ்சைகள் - பயனற்றவர்கள்; கொட்டம் - கருவம்; வாளா - சும்மா; தகர்த்தனர் - இடித்தனர்; நச்சுப்புகை - விஷப்புகை; கனவு × நனவு.

## வினாக்கள்

1. வீரபாண்டியக் கட்டபொம்மு துரையின் சிறப்புக்கள் யாவை?

2. ஆங்கிலேயருக்கும் கட்டபொம்முவுக்கும் பகைமை உண்டாகக் காரணம் என்ன?

3. வீரபாண்டியரிடம் ஆலன் துரை ஏன் அனுப்பப்பட்டார்? அவரிடம் கட்டபொம்மு யாது கூறினர்?

4. ஜாக்ஸன் துரை யார்? அவர் வீரபாண்டியரை அடக்குவதற்குச் செய்த முயற்சிகள் யாவை? அவை எவ்வாறு முடிவுற்றன?

5. இந்தியச் சுதந்திர வரலாற்றில் பொன்னுள் என்று கூறத்தக்க பெருமையுடையது எது? ஏன்?

6. வீரபாண்டியர் ஆங்கிலேயரால் எங்ஙனம் சிறைப்படுத்தப்பட்டார்?

7. வீரபாண்டியரின் முடிவைப்பற்றிக் கூறுக.

8. ஊமைத்துரை எவ்வாறு சிறையிலிருந்து தப்பித்துக் கொண்டார்?

9. ஊமைத்துரை பாஞ்சாலங்குறிச்சியில் புதிதாக அமைத்த கோட்டையின் சிறப்பை விளக்குக.

10. பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையை ஆங்கிலேயர் எங்ஙனம் வென்றனர்?

11. ஊமைத்துரை எங்கு எவ்வாறு சிறைப்பட்டார்?

12. கட்டபொம்மு சகோதரர்களின் வீர மரணத்தால் நேர்ந்த விளைவுகள் யாவை?

## மொழிப் பயிற்சி

**I. பிரித்து எழுதுக :**—நல்லாட்சி, பேரன்பு, தோளூரம், இருபத்து மூன்று, பொன்னுள்.

**II. சேர்த்து எழுதுக :**—பெருமை + ஆற்றல், சிறுமை + அரசர், நான்கு + நூறு, நஞ்சு + புகை ; கண் + எதிரே.

**III. சொந்த வாக்கியங்களில் உபயோகிக்க :**—காட்டிக்கொடுத்தல், கோழை, பதவி வகித்தல், பறையறைந்தனர், குற்றஞ் சாட்டுதல், எடுத்துக்காட்டாக, நயவஞ்சகம், வாளா இரு, எண்ணி எண்ணி.

## இலக்கணம்

மரத்தை, எல்லாவற்றை, எனக்கு—இச்சொற்களை மரம் + **அத்து** + ஐ ; எல்லாம் + **அற்று** + ஐ ; என் + அ + கு எனப் பிரிக்கலாம். மரம், எல்லாம், என் (யான்) என்பன பெயர்ச்சொற்கள். இவற்றுடன் ஐ, கு முதலிய வேற்றுமை உருபுகள் சேரும்போது அத்து, அற்று, அ என்பன சொற்களைச் சார்ந்து அவற்றைப் பொருத்தமாக உச்சரிக்கப் பயன்படுகின்றன. இவை சாரியை எனப்படும். இவ்வாறே பகுபதங்களிலும் சாரியைகள் வருவதுண்டு.

(உ - ம்.) உண்டனன்—உண் + ட் + **அன்** + அன் : **அன்** - சாரியை. மக்களின் : **இன்** - சாரியை ; காண்குவன் : கு - சாரியை ; நெஞ்சம் : நெஞ்சு + அம் : **அம்** - சாரியை.

# 6. ஞாயிறு தோன்றும் நாடு

உலகில் உள்ள கண்டங்களில் மிகவும் பெரியது ஆசியாக் கண்டமாகும். உலக மக்களில் மூன்றில் ஒரு பகுதியினருக்குமேல் இக்கண்டத்தில் வாழ்கின்றனர். இங்கு வாழும் மக்களில் மிகப் பழமையான நாகரிகம் வாய்ந்தவர் இந்தியர், சீனர், ஜப்பானியர் எனப்படுவோராவர். இவர்களுள் ஜப்பானியர் வாழும் ஜப்பான் நாடு இயற்கை எழிலும் தொழில் வளமும் செல்வச் சிறப்பும் பெற்ற நாடாகும். ஜப்பான் நாடு ஆசியாவின் கிழக்கில் உள்ளது. இந்நாட்டு மக்கள் தங்கள் நாட்டிலேயே சூரியன் தோன்றுவதாகக் கருதினர்; ஆதலால் இதனை 'ஞாயிறு தோன்றும் நாடு' எனப் பொருள் தரும் 'நிப்பான்' என்ற சொல்லால் வழங்குகின்றனர். நிப்பான் என்ற பெயரே ஜப்பான் என மாறி வழங்குவதாயிற்று. அந்நாட்டு அரசர்கள் தாங்கள் சூரிய வமிசத்தைச் சார்ந்தவர்கள் என்று கருதுகின்றனர். அந்நாட்டைப் பற்றியும் அதில் வாழும் மக்களைப் பற்றியும் சுருக்கமாக அறிவோம்.

ஜப்பான் நாடு பசிபிக் பெருங்கடலில் பிறைச்சந்திரனைப்போல அமைந்துள்ள ஏறக்குறைய மூவாயிரம் தீவுகளின் கூட்டமாகும். அத்தீவுகளிற் பல எரிமலைகளால் உண்டானவையாகும். எனவே அத்தகைய தீவுகள் மக்கள் வாழ்க்கைக்குப் பயன்படாதனவாயுள்ளன. அவற்றில் **ஹோன்ஷு, ஹொக்கைடோ, ஷிக்கோகு, கியுஷு** என்னும் நான்கு தீவுகளும் மற்றும் சில சிறு தீவுகளும் மக்கள் வாழ்வதற்கேற்ற நிலவளம் நீர்வளம் பெற்றனவாய்த் திகழ்கின்றன. இத்தீவுகளில் வாழும் ஜப்பானிய மக்களின் தொகை எட்டுக்கோடியாகும்.

ஜப்பான் மலைகளடர்ந்த நாடாகும். அம்மலைகளில் மிகவும் உயரமானது **பூஜியாமா** என்று வழங்கப்படுகிறது. அது முன்னொரு காலத்தில் மூண்டெரியும் எரிமலையாக இருந்தது. தற்போது அம்மலை அமைதியுற்று விளங்குகிறது. அம்மலை 12,392 அடி உயரமுள்ளது.

பனியடர்ந்த அதன் சிகரம் எட்டு இதழ்களைக் கொண்ட வெண்டாமரை போல் நடுவில் ஐந்நூறு அடி ஆழமுடைய தாய்க் காண்பவர்க்கு அச்சத்தையும் வியப்பையும் அளிக்கிறது. முன்பு அஃது எரிமலையாய் இருந்து வெடித்துத் தீக்குழம்பைக் கக்கியமையாலேயே அத்தகைய பெரும் பள்ளம் அதன் சிகரத்தில் ஏற்பட்டது. இந்துக்கள் இமயமலையைக் கடவுள் உறையும் இடமாகக் கருதி வழி படுவது போல ஜப்பானியர் அம்மலையை ஆண்டவன் உறையும் இடமாகக் கருதிப் போற்றுகின்றனர். ஆண்டு தோறும் ஆயிரக்கணக்கானவர் அம்மலைக்கு யாத்திரை யாகச் சென்று அதன்மீது ஏறிக் கதிரவனின் கண் கொள்ளாத் தோற்றத்தைக் கண்டு இறைவனை வழிபடுகின்றனர்.

ஜப்பானில் பல சிறு ஆறுகள் பாய்ந்து வளம் செய்கின்றன. அவை பனிமலைகளிலிருந்து உண்டாவதால் என்றும் வற்ருது வளம் சுரப்பனவாய் விளங்குகின்றன. இந்நாட்டில் உள்ள 'பீவா' என்னும் ஏரி குறிப்பிடத்தக்கதாகும். இவ்வேரி ஐம்பது மைல் நீளமும் இருபது மைல் அகலமும் உடையதாய்ப் பரந்த கடல் போல் காட்சியளிக்கிறது. ஜப்பான் எரிமலைகளடர்ந்த நாடாகையால் அந் நாட்டின் பல பகுதிகளில் வெந்நீர் ஊற்றுக்கள் மிகுதியாக உள்ளன. அவை மக்கள் நீராடி மகிழ்வதற்கேற்ற வசதி உடையனவாம்.

இங்ஙனம் மலைவளமும் நீர்வளமும் செழித்த அந்நாடு மலைச் சரிவுகளில் அடர்ந்த காடுகளையும் உடையதாய் விளங்குகிறது. அதனால் அந்நாடு தொழில் வளத்தில் சிறந்து விளங்குகிறது. அக்காடுகளில் கற்பூர மரங்கள் அதிகமாய் உள்ளன. அவற்றிலிருந்து கற்பூரம் தயாரித்துப் பல நாடுகளுக்கும் அனுப்பி ஜப்பானியர் பெரும் பொருளீட்டுகின்றனர். நாட்டில் பாதிக்குமேல் காடுகளடர்ந்துள்ளன. மற்றைப் பாதியில் ஜப்பானியர் அரிசி, கோதுமை, புகையிலை, பருத்தி, கரும்பு போன்றவற்றை மிகுதியாகப் பயிர் செய்கின்றனர். அதனால் அந்நாடு

முழுதுமே பச்சைப் பசேரென்று கண்ணைக் கவரும் பேரழகுடையதாய் விளங்குகிறது.

ஜப்பானின் தலைநகரம் டோகியோ என்னும் நகரமாகும். உலகில் உள்ள நாகரிகத்தில் சிறந்த நகரங்களில் இதுவும் ஒன்ருகும். இந்நகரம் மூன்று பிரிவுகளைக் கொண்டதாக அமைந்துள்ளது. மேற்குப் பகுதியில் மக்கள் வாழுமிடங்களும் கல்வி நிலையங்களும் அமைந்துள்ளன. கிழக்குப் பகுதியில் சிறந்த கடைத் தெருக்களும் தொழிற்சாலைகளும் விளங்குகின்றன. இடையில் உள்ள பகுதியில் அரச மாளிகையும் அரசாங்க அலுவலகங்களும் அமைந்துள்ளன. இப்பகுதி **மருனேச்சி** என வழங்கப்படுகிறது. இந்நகரில் குறிப்பிடத்தக்கவை அரச மாளிகையும் **கின்ஸா** என்னும் கடைவீதியுமாகும். அக்கடை வீதியில் உலகில் உள்ள எல்லாப் பொருள்களும் கிடைக்கும். மற்றும் அங்கு ஐம்பது ஏக்கர் பரப்புள்ள ஒரு பெரிய தோட்டம் உள்ளது. அங்கு அந்நாட்டில் உள்ள எல்லாவகையான தாவரங்களும் வளர்க்கப்படுகின்றன.

டோகியோ நகரில் போக்குவரவு வசதி மிகச் சிறந்த முறையில் அமைந்துள்ளது. மின்சார இரயில் வண்டிகளும், புகை வண்டிகளும், டிராம் வண்டிகளும், வாடகை மோட்டார்களும் மிகுதியாக உள்ளன. பல இடங்களில் பூமிக்கடியில் செல்லும் சுரங்க இருப்புப்பாதைகள் அமைக்கப்பட்டுள்ளன. கடலுக்கடியில் செல்லும் சுரங்க இருப்புப்பாதைகளும் அங்கு உள்ளன. ஆகையால் மக்கள் நகரின் பல பாகங்கட்கும் வேறு நகரங்களுக்கும் விரைவாகவும் எளிதாகவும் செல்ல முடிகிறது.

இங்ஙனம் இயற்கை வளமும் செயற்கை நலமும் வாய்ந்த நாட்டில் வாழும் மக்கள் சிறந்த நாகரிகமும் ஒழுக்கமும் பண்பாடும் வாய்ந்தவர்களாய் விளங்குகின்றனர். அந்நாட்டில் அடிக்கடி நிலநடுக்கம் உண்டாகும். ஆகையால் அவர்கள் தம் வீடுகளை மரத்தாலும் மெழுகுக் காகிதத்தாலும் அமைத்துக் கொள்கின்றனர். நிலநடுக்கத்தால் அவை அழிந்தாலும் அவற்றை மீண்டும் அமைத்

துக் கொள்ளுதல் மிக எளிதாகும். ஆனல் அரசாங்க மாளிகைகளும் அலுவலகங்களும், மற்றும் பல பெரிய கட்டடங்களும் நிலநடுக்கத்தாலும் அழியாதவாறு விஞ்ஞான முறைப்படி வலிமையாக அமைக்கப்பட்டுள்ளன.

ஜப்பானியர்கள் அனைவரும் கல்வி கற்றுள்ளனர். அங்குள்ள ஏழைத் தொழிலாளிகளும் ஓய்வு நேரம் கிடைக்கும்போதெல்லாம் செய்தித்தாள் படிக்கும் வழக்கமுடையவராய் உள்ளனர். மக்களின் கல்வி வளர்ச்சிக்காக அரசாங்கம் அரும்பாடு பட்டு வருகிறது. குழந்தைகளுக்கு ஆரம்பக் கல்வியும் அதற்கடுத்த நடுநிலைக் கல்வியும் கட்டாயமாகக் கற்பிக்கப்படுகின்றன. அங்ஙனம் படித்த மாணவர்கள் பின்பு தம் விருப்பம்போல் உயர் கல்வியோ, தொழிற் கல்வியோ கற்க வசதி செய்யப்பட்டுள்ளது. மாணவர்க்குப் பலவகையான அறிவுத் துறைகளையும் கற்பிக்க அந்நாட்டில் அறுநூறுக்கும் மேற்பட்ட கல்லூரிகளும் பல பல்கலைக் கழகங்களும் உள்ளன. அவற்றுள் டோக்கியோ பல்கலைக் கழகமும் வாசீதாப் பல்கலைக் கழகமும் மிகச் சிறந்தனவாம். தொழிற் கல்வி கற்பிக்க அளவற்ற தொழிற் கல்வி நிலையங்கள் உள்ளன. அங்குச் சிறு குண்டூசி முதல் பெரிய பெரிய இயந்திரங்கள் வரை செய்யக்கூடிய பற்பல தொழில்களும் கற்பிக்கப்படுகின்றன. அதனலேயே ஜப்பான் நாடு தொழில் வளம் சிறந்த நாடாக விளங்குகின்றது.

அந்நாட்டில் பலவகையான தொழில்களும் நடைபெறுகின்றன. ஜப்பானியர் செய்யாத தொழில்களே இல்லை எனலாம். நம் நாட்டில் கிடைக்கும் பலவிதமான ஜப்பான் பொருள்கள் இவ்வுண்மையை நன்கு விளக்கும். ஜப்பான் பொருள்கள் யாவும் விலை மலிவானவை. ஜப்பானில் பெரும்பாலான தொழில்கள் யாவும் குடிசைத் தொழில்களாக நடைபெறுகின்றமையே அதற்குக் காரணமாகும். ஜப்பானியர் புரியும் தொழில்களில் முத்துக் குளிக்கும் தொழிலும் பட்டு உற்பத்தித் தொழிலும் சிறப்பாகக் குறிக்கத்தக்கனவாம்.

முத்துக் குளிக்கும் தொழிலில் பெரும்பாலும் பெண்

களே ஈடுபட்டுள்ளனர். அவர்கள் இத்தொழிலில் திறமை யுடையவர்களாய் விளங்குகின்றனர். ஆழ்கடலில் மூழ்கி மூச்சை அடக்கி முத்துச் சிப்பிகளை வாரி வருவதற்கு எவ்வளவு ஆற்றலும் அஞ்சாமையும் வேண்டும் என்ப தைச் சிந்தித்துப் பாருங்கள். இயற்கை முறையில் முத் துக்களைப் பெறுவதோடு செயற்கை முறையிலும் அவர் கள் முத்துக்களைத் தயாரிக்கின்றனர். முத்துச் சிப்பிகளை உள்ளிருக்கும் நுண்ணுயிர்க்குத் தீங்கு நேராவண்ணம் மெதுவாகத் திறந்து, அதனுள் சிப்பி ஓட்டால் செய்யப் பட்ட சிறுமணியை வைத்து மூடிவிடுவர். அங்ஙனம் மூடப்பட்ட முத்துச் சிப்பிகளைக் கடலில் ஆழமான இடத் தில் வலைகட்டித் தொங்கவிட்டு வைத்திருப்பர். நான் காண்டுகளில் அம்மணிகள் ஒளியுடைய நன்முத்துக்க ளாக மாறியிருக்கும். பிறகு அச் சிப்பிகளிலிருந்து முத்தை மட்டும் மெதுவாக எடுத்துக்கொண்டு மீண்டும் அவைகளையே பயன்படுத்திக் கொள்வர். இம்முறையால் ஏராளமான முத்துக்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன.

பட்டுத் தொழில் ஜப்பான் நாட்டின் பழமையான கைத் தொழிலாகும். பட்டுப் பூச்சி வளர்ந்து பெருகு வதற்கேற்ற தட்ப வெப்பநிலை அங்கு இயற்கையாகவே அமைந்துள்ளது. பட்டுப் புழுக்கள் உண்டு வளர்வதற் கான முசுக்கொட்டைச் செடிகள் அங்கு மிகுதியாகப் பயிராகின்றன. அதனால் பட்டு உற்பத்தித் தொழில் ஜப்பானின் பெரிய கைத்தொழிலாக—அவர்கட்குப் பெரிய வருவாய் தரும் தொழிலாக—அமைந்துள்ளது. ஜப்பான் பட்டுத் தொழிலில் முதன்மை பெற்றுள்ளது. ஜப்பான் பட்டு உலகிலேயே மிகச் சிறந்ததாகக் கருதப்படுகிறது. இவையன்றிக் காகிதம் செய்தல், கப்பல் கட்டுதல், பல வகை இயந்திரங்கள் செய்தல் போன்ற தொழில்களிலும் ஜப்பான் சிறந்து விளங்குகிறது. அங்கு உழவுத் தொழி லும் மிக்க வளம் பெற்றுள்ளது. இங்ஙனம் பல்வகைத் தொழில்களும் சிறந்து விளங்குவதால் வாணிகத் துறை யில் ஜப்பான் பிறநாடுகளுடன் போட்டியிட்டுப் பொருளா தாரத்தில் சிறந்த நாடாகத் திகழ்கின்றது.

ஜப்பானிய மக்கள் உயர்ந்த பழக்கவழக்கங்களை உடையவர்களாக இருக்கின்றனர். அவைகளில் சில நம் நாட்டுப் பழக்க வழக்கங்களாகவே உள்ளன. அவர்கள் கடவுள் நம்பிக்கை உடையவர்களாவர். ஜப்பானியர் ஷிண்டோ என்னும் பழமையான மதத்தைப் பின்பற்றி வாழ்கின்றனர். இயற்கையைக் கடவுளாக வழிபடுவதே அம்மதத்தின் உயர்ந்த கடவுள் வழிபாட்டு முறையாகும். ஜப்பானில் மிகப் பரவியுள்ள மதம் புத்தமதமாகும். ஜப்பானில் எங்குச் சென்றாலும் புத்தக் கோயில்களையும் புத்தரின் உருவச் சிலைகளையும் காணலாம்.

அந்நாட்டுக் குடிமக்கள் நாட்டுப் பற்று மிக்கவர்களாவர். அவர்கள் தங்கள் மன்னரைக் கடவுளாகவே எண்ணிப் போற்றுகின்றனர். ஜப்பானியர் மிகவும் அமைதியாக வாழும் இயல்புடையவர். அவர்கள் எப்பொழுதும் கருமமே கண்ணாக வாழ்பவராவர். ஜாதி, மதம் குறித்த ஏற்றத் தாழ்வுகள் அங்கு அதிகமில்லை. அவர்கள் அனைவரிடமும் அன்பும் மரியாதையும் உடையவர்களாய்ப் பழகுகின்றனர். ஜப்பானியரிடம் உள்ள ஓயாத சுறுசுறுப்பு, கடமை உணர்ச்சி, தந்நம்பிக்கை ஆகிய நற்பண்புகள் உலகில் அவர்களை உயர்ந்த ஒரு சமுதாயத்தினராகச் செய்துள்ளன.

ஜப்பானியப் பெண்மணிகள் சமூகத்தில் மிகவும் உயர்ந்த நிலையில் வைத்துப் போற்றப் படுகின்றனர். குடும்பத்தை நடத்தும் பொறுப்பில் பெரும்பகுதி பெண்களைச் சார்ந்ததேயாம். ஜப்பானியப் பெண்கள் நல்ல உடல் உரமும் பேரழகும் வாய்ந்தவர்கள். "ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்வமிந்த நாட்டிலே" என்று பாரதியார் கூறியதுபோல அப்பெண்மணிகள் எல்லாத் துறைகளிலும் ஆண்களுக்குச் சரிசமமாக வாழ்கின்றனர். ஆண்களைப் போலவே அவர்களும் உடல் வருந்தி உழைத்துப் பலதொழில்களிலும் ஈடுபட்டுப் பொருளீட்டுகின்றனர். அதனால் ஜப்பானியக் குடும்பம்

ஒவ்வொன்றும் வறுமை யறியாமல் மகிழ்ச்சியோடு வாழ்ந்து வருகின்றது.

ஜப்பானிய மக்கள் மிக்க கலையுணர்ச்சி வாய்ந்தவர்கள். சிற்பம், ஓவியம் போன்ற அழகுக் கலைகளிலும் இசை, நடனம் போன்ற நுண்கலைகளிலும் அவர்கள் வல்லவராய்த் திகழ்கின்றனர். அவர்கள் வீடுகளில் உள்ள பொருள்கள் யாவும் ஓவியம் தீட்டப்பட்டு அழகோடு விளங்கும். மற்றும் அவர்கள் உடையணியும் முறையையும் ஒரு கலையாகவே போற்றி வளர்த்து வருகின்றனர். அவர்கள் தற்காலத்தில் மேனாட்டு உடைகளையே பெரிதும் விரும்பி அணிந்தாலும் விழாக்காலங்களில் தம் தேசீய உடையையே அணிகின்றனர். அவ்வுடை 'கிமோனோ' என்று வழங்கப்படுகிறது. உயர்ந்த பட்டில் பலவகைப் பூவேலையும் செய்யப்பட்டு அவ்வுடை பேரழகுடையதாக விளங்குகிறது.

ஜப்பானிய மக்கள் கையாளும் பழக்கங்களில் அவர்கள் தேனீர் அருந்தும் முறை சிறப்பாகக் குறிக்கத்தக்கதாகும். அதனை அவர்கள் ஓர் அழகுக் கலையாகவே வளர்த்துள்ளனர். அவ்விருந்து சானோயு என வழங்கப்படுகிறது. அவ்விருந்து நடத்தும் முறையை ஒவ்வொரு குடும்பத்திலும் பெண்களுக்குக் கருத்துடன் கற்பிக்கின்றனர். அத்தகைய விருந்துகளால் தத்தம் குடும்பத்தின் பெருமையை நினைவுபடுத்திக் கொள்ளவும், உறவினர், நண்பர்களுக்கிடையே ஒற்றுமையை வளர்க்கவும், அன்பு, அடக்கம், பொறுமை ஆகிய நற்பண்புகளை வளர்க்கவும், கலையுணர்ச்சியைப் பெருக்கவும் ஏற்ற வாய்ப்பு உண்டாவதாக அவர்கள் கருதுகின்றனர்.

இங்ஙனம் மிக்க பழமையான பண்புகளும் தொழில் வளமும், செல்வச் சிறப்பும் வாய்ந்த ஜப்பானிய மக்களுக்கும் நமக்கும் இக்காலத்தில் பல துறைகளில் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டு வருகிறது. இதனால் இரு நாடுகளும் ஆசிய நாடுகளில் உயர்ந்த நிலையை எய்துதல் கூடும் என்று நம்பலாம்.

## அருஞ்சொல் விளக்கம்

எழில் - அழகு ; கதிரவன் - சூரியன் ; பண்பாடு - சீர்திருத்தம், செம்மை ; நுண்ணுயிர் - நுட்பமான உயிர் ; ஆற்றல் - திறமை ; நிலவி வருகின்றது - பரவி வருகின்றது ; இல்லம் - வீடு ; உரம் - வலிமை.

## வினாக்கள்

1. ஜப்பான் என அந்நாடு பெயர் பெறக் காரணம் என்ன ?
2. பூஜியாமா—குறிப்பு வரைக.
3. ஜப்பான் நாட்டின் மலைவளம் நீர்வளம் ஆகியவற்றை விளக்குக.
4. டோகியோ நகரின் முப்பிரிவுகள் யாவை? அவற்றுள் அமைந்துள்ளவற்றைக் குறிப்பிடுக.
5. ஜப்பானியர் தம் வீடுகளை எவற்றால் அமைத்துக் கொள்கின்றனர் ? அதற்குக் காரணம் யாது ?
6. ஜப்பான் நாடு தொழில் வளம் சிறந்த நாடாக விளங்கக் காரணம் என்ன ?
7. ஜப்பானில் நடைபெறும் முத்துக் குளிக்கும் தொழிலைப் பற்றி விளக்குக.
8. ஜப்பானில் செய்யப்படும் பொருள்கள் விலை மலிவாக இருக்கக் காரணம் யாது ?
9. பட்டு உற்பத்தியில் ஜப்பான் நாடு முன்னணியில் நிற்கிறது—ஏன் ?
10. ஜப்பான் பொருளாதாரத்தில் சிறந்த நாடாகத் திகழக் காரணம் யாது ?
11. ஷிண்டோ, கிமோனோ, சானோயு—குறிப்பு வரைக.
12. ஜப்பானியர் தம் நற்பண்புகள் யாவை ?
13. ஜப்பானியர் கலையுணர்ச்சி மிக்கவர் என்பதற்குச் சான்றுகள் தருக.

## மொழிப் பயிற்சி

I. பிரித்து எழுதுக:—மூண்டெறியும், வெண்டாமரை, பனிபடர்ந்த, இவ்வேரி, வெந்நீர், பொருளீட்டுகின்றனர், நுண்ணுயிர், பேரழகு.

II. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக:—கண்கொள்ளா, வசதி, ஈடுபடுதல், நிலவி, அணுகா, பச்சைப் பசேரென்று.

III. கீழ்க்கண்ட கலவை வாக்கியத்தைத் தனிநிலை வாக்கியங்களாகப் பிரித்தெழுதுக:—ஆண்டுதோறும் ஆயிரக்கணக்கானவர் அம் மலைக்கு யாத்திரையாகச் சென்று அதன் மீதேறி, கதிரவனின் கண்கொள்ளாத் தோற்றத்தைக் கண்டு இறைவனை வழிபடுகின்றனர்.

## இலக்கணம்

1. வழிபடுகின்றனர் - இச் சொல்லில் வழிபடு - பகுதி; கின்று - இடைநிலை; அன் - சாரியை; அர் - விகுதி. இங்கு வழிபடு என்னும் பகுதி நீங்கலாக இடைநிலை, சாரியை, விகுதி முதலியன வினைச்சொல்லை இடமாகக் கொண்டு வந்துள்ளன. இவை **இடைச் சொற்கள்** எனப் படும்.

இவையன்றிப் பெயர்ச் சொற்களை அடுத்து வரும் வேற்றுமை உருபுகளும், போல, ஒப்ப, நேர, அன்ன, இன்ன போன்று வரும் உவம உருபுகளும், சுட்டு, வினா எழுத்துக்களும் இடைச் சொற்களேயாம்.

| | | |
|---|---|---|
| ஆண்களும் பெண்களும் | — **உம்** | இடைச்சொல் |
| காணுங்கொல், வருங்கொல் | — **கொல்** | ,, |
| மற்றொன்று, மற்றொரு | — **மற்று** | ,, |
| அவன் தான், அது தான் | — **தான்** | ,, |
| அவனே, இவனே | — **ஏ** | ,, |
| கந்தனோ, கண்ணனோ | — **ஓ** | ,, |

2. சாலப் பேசினான், உறுபொருள்—இத்தொடர்களில் சால, உறு என்பன மிகுதி என்னும் பொருளில் வந்தன. இங்ஙனம் பெயர் வினைகளின் குணத்தை உணர்த்தி வரும் சொற்கள் **உரிச்சொற்களாம்.**

(i) ஒரு பொருளை உணர்த்தும் பல உரிச்சொற்கள் :

(உ - ம்.) சால, உறு, தவ, நனி, கழி, கூர்—இவை யாவும் மிகுதி என்னும் ஒரு பொருளைத் தருவனவாம்.

(ii) பல பொருள்களை உணர்த்தும் ஓர் உரிச்சொல் :

(உ - ம்.) கடி நகர் (காவல்); கடி மணம் (புதுமை); கடி வேல் (கூர்மை); கடி மலர் (மணம்); கடி முரசு (ஒலி); கடி விடுதும் (விரைவு).

# 7. இன்பச் செலவு

மக்கள் மனத்தில் தோன்றும் உணர்ச்சிகள் இசை வடிவமாகவும் கவிதைகளாகவும் சிற்ப ஓவியங்களாகவும் வெளிப்படுகின்றன. அவையே கலைகள் எனப்படும். கலைகள் அறுபத்து நான்கு வகைப்படும். 'ஆய கலைகள் அறுபத்து நான்கினையும் ஏய உணர்விக்கும் என் அம்மை' என்று கலைமகளைப் போற்றுகின்றார் கம்பர். கலைகளே ஒரு நாட்டின் உயர்வை விளக்கும் சின்னங்களாகும். ஆதலால் நம் நாட்டு அரசர்கள் கலைகளைச் செல்வமெனப் போற்றி வளர்த்து வந்தனர். அத்தகைய கலைகளுள் சிற்பமும் ஓவியமும் மிகவும் நுட்பமான கலைகளாம். தேர்ந்த அநுபவம் வாய்ந்தவர்களே அக்கலைகளில் சிறந்து விளங்க முடியும். நம் நாட்டில் பண்டு மிகச் சிறந்த சிற்பிகளும் ஓவியர்களும் நிறைந்திருந்தனர். அதனாலேயே நம் நாட்டில் உள்ள கோயில்களும் மண்டபங்களும் சிற்ப ஓவியக் கலைக் கூடங்களாக விளங்குகின்றன.

சிற்பமும் ஓவியமும் ஒன்றோடொன்று தொடர்புடைய கலைகளாகும். ஓவியம் என்பது கண்ணால் கண்ட பொருளையேனும், கருத்தில் தோன்றும் கற்பனையையேனும் பலவித வண்ணங்களைக் கொண்டு வரைந்து காட்டுவதாகும். சிற்பமாவது அவற்றைக் கல்லிலும் செம்பிலும் ஏனைய உலோகங்களிலும் உளிகொண்டு செதுக்கிச் செய்வதாகும். மண்ணினாலும் சுண்ணாம்பினாலும் பலவித உருவங்களைச் செய்வதும் சிற்பக் கலையேயாகும்.

நம் நாட்டில் எங்குச் சென்றாலும் இக்கலைகளின் சிறப்பைக்கண்டு மகிழலாம். எல்லோரா, மகாபலிபுரம், அஜந்தா, சிற்றன்ன வாசல், தஞ்சைப் பெரிய கோயில், மதுரை மீனாட்சி கோயில் ஆகிய இடங்கள் அயல் நாட்டவரும் வியந்து போற்றும் கலைச் செல்வம் வாய்ந்தனவாம். இவற்றுள் எல்லோரா, மகாபலிபுரம், ஆகிய இடங்களில் உலகப் புகழ்பெற்ற அற்புதச் சிற்பங்கள் உள்ளன.

அஜந்தா, சிற்றன்ன வாசல் ஆகிய இடங்களில் ஆயிரக் கணக்கான ஆண்டுகளாகியும் நிறம் குலையாமல் புத்தம் புதியனவாகக் காட்சியளிக்கும் வண்ண ஓவியங்கள் நிறைந்துள்ளன. நம் நாட்டிற்கு வரும் அயல் நாட்டினர் இவற்றைப் பாராமல் செல்வதில்லை.

சென்னையில் உள்ள பள்ளியில் பயிலும் மாணவர் உலகப் புகழ்பெற்ற எல்லோராவுக்குச் சென்று கண்டு வந்து கூறிய விவரம் அவர்கள் கூறியவாறு கீழே தரப் பட்டுள்ளது.

இந்தக் கோடை விடுமுறையில் மாணவர் சிலர் சேர்ந்து சிற்பச் சிறப்பு வாய்ந்த எல்லோராவுக்குச் சென்று கண்டு மகிழ்வதென முடிவு செய்தோம். எங்கள் ஆசிரியரையும் உடன் வருமாறு வேண்டினேம். அவரும் வர இசைந்தது எங்கட்குப் பெருமகிழ்ச்சியை அளித்தது. பிரயாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளை விரைவில் செய்து முடித்தோம். குறிப்பிட்ட நாளில் அனைவரு மாகச் சென்னை செண்ட்ரல் புகைவண்டி நிலையத்தில் வண்டி ஏறிப் புறப்பட்டோம். நாங்கள் பகற்பொழுதில் பிரயாணம் செய்தமையால் வழியில் பலவகைக் காட்சி களையும் கண்டு இன்புற்றவாறே சென்றேம். வழியில் வட பெண்ணை, கிருஷ்ணை முதலிய நதிகளைக் கடந்து சென்றபோது நாங்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. இவ்வாறு இரண்டு நாட்கள் பிரயாணம் செய்து ஐதராபாத் இராச்சியத்தின் முக்கியப் பட்டணமாகிய செகந்தராபாத்தை அடைந்தோம். எல்லோராக் குகை கள் செகந்தராபாத்திலிருந்து பதினறு கல் தொலைவில் உள்ளன. அவ்வளவு தூரத்துக்கும் அழகிய சாலை அமைக்கப்பட்டுள்ளது. மறுநாள் காலையில் புறப்பட்டு மோட்டாரில் ஏறிச் சென்று நாங்கள் எல்லோராவை அடைந்தோம்.

எல்லோரா, குன்றுகள் அடர்ந்த சிறு கிராமமாகும். இங்கு அமைதியும் அழகும் பொலிகின்றன. அச்சூழ் நிலையே சிற்பிகள் மனத்தைக் கவர்ந்து அங்குள்ள வியக் கத்தக்க சிற்பங்களை அமைக்க உதவியது போலும். அங்கு

எல்லோராவைக் காண வருவோர் தங்குவதற்கென அரசாங்கத்தாரால் அமைக்கப்பட்டுள்ள விடுதி ஒன்று உள்ளது. நாங்கள் அங்குச் சென்று தங்கினோம். விரைவில் உணவை முடித்துக்கொண்டு எல்லோராக் குகைகளைக் காணப் புறப்பட்டோம். புறப்படுமுன் எங்கள் ஆசிரியர் எல்லோராவின் வரலாற்றைச் சுருக்கமாகக் கூறினார். அது பின்வருமாறு :

"இங்கு முப்பத்து நான்கு குகைக் கோயில்கள் உள்ளன. இவை யாவும் இங்கிருந்த குன்றுகளையே குடைந்து அமைக்கப்பட்டனவாகும். இக்குகைகள் முழுவதும் ஒரே காலத்தில் அமைக்கப்பட்டனவல்ல; சமணர்களாலும், பௌத்தர்களாலும், சைவர்களாலும் பல்வேறு காலங்களில் அமைக்கப் பட்டனவாகும். இங்குள்ள பன்னிரண்டு குகைகள் பௌத்த சமயத்தைச் சார்ந்தன. பதின்மூன்று முதல் இருபத்தொன்பது வரையுள்ள பதினேழு குகைகள் இந்து சமயத்திற்குரியன. ஏனைய ஐந்தும் சமண சமயத்தைச் சார்ந்தன. சமண, பௌத்தக் குகைகள் மிகவும் பழமையானவை. கி. பி. இரண்டு, மூன்றும் நூற்றாண்டுகளில் இந்துமதம் செழிக்கத் தொடங்கிய காலத்தில் அவர்களால் துன்புறுத்தப்பட்ட சமண, பௌத்த சமயத்துறவிகள் மக்கள் நடமாட்டம் இல்லாத இந்த அமைதியான இடத்தை அடைந்து வாழ்ந்தனர். அவர்களால் உண்டாக்கப்பட்டனவே இக் குகைகள் என்று அறிஞர்கள் கூறுகின்றனர். இந்து சமயத்தைச் சார்ந்த குகைகள் ஏழாம் நூற்றாண்டு முதல் ஒன்பதாம் நூற்றாண்டுவரை ஆண்ட இராட்டிர கூட மன்னர்களால் ஏற்படுத்தப் பட்டனவாம். இவற்றுள் மிகச் சிறந்தது கயிலாயக் கோயில் என வழங்கும் பதினாறாவது குகைக் கோயிலேயாகும். இக்கோயில் உண்டானது பற்றி ஒரு வரலாறும் கூறப்படுகின்றது.

கி. பி. எட்டாம் நூற்றாண்டில் ஆண்ட முதலாம் **கிருஷ்ணன்** என்னும் இராட்டிர கூட மன்னன் சளுக்கிய அரசரைப் போரில் வென்றான். அவன் தான் பெற்ற வெற்றிக்கு அடையாளமாக ஒரு சின்னம் நிறுவ எண்

ணினன். சிவபெருமான் வசிக்கும் கயிலையைப் போன்ற ஒரு கோயிலை அமைப்பதே தக்க சின்னமாகும் என அவன் முடிவுசெய்தான்; அதற்கு ஏற்ற இடம் எல்லோராவே எனத் தேர்ந்து தலை சிறந்த சிற்பிகளை ஏற்பாடு செய்து கயிலாயக் கோயிலை அமைக்கச் செய்தான். இக்கோயில் முற்றுப் பெறுவதற்குமுன் அம்மன்னன் இறந்துவிட்டான். எனினும் கோயிற்பணி இடையூறின்றி முடிவதற்கேற்ற எல்லா ஏற்பாடுகளையும் அவன் செய்து வைத்திருந்தானகையால் அவனுக்குப் பின்வந்தோர் இப்பணியை முற்றுவித்தனர்.''

இவ்வாறு எங்கள் ஆசிரியர் கூறிய வரலாற்றைக் கேட்டபின் நாங்கள் மிக்க உற்சாகத்துடன் குகைக் கோயில்களைக் காணச் சென்றேம். முதலில் உள்ள பௌத்தக் குகைகளில் பதினெரு குகைகள் ஒரு மாதிரியாகவும், பத்தாவது குகைமட்டும் வேறுமாதிரியாகவும் அமைந்துள்ளன. ''பௌத்தக் குகைகளை **விகாரம்** என்றும் **சைத்தியம்** என்றும் இருவகைகளாகப் பிரிக்கலாம். விகாரங்கள் பௌத்தத் துறவிகள் தங்குவதற் கேற்றன. சைத்தியம் புத்தர் எழுந்தருளியுள்ள கோயிலாகும்,'' என ஆசிரியர் விளக்கினர். அவர் கூறியமைக்கு ஏற்பப் பதினெரு குகைகள் புத்தத் துறவிகள் அமர்ந்து கடவுளை வழிபடுவதற்கு வசதியாக நடுவில் பெரிய கூடமும், கூடத்தைச் சுற்றிலும் தங்கும் அறைகளும் அமைந்து விளங்குகின்றன. சைத்தியத்தின் நடுவே மண்டபமும் மண்டபத்தைச் சுற்றித் தூண்கள் அமைந்த சுற்று மதில்களும் மண்டபத்தின் கோடியில் மூலத்தானமும் அமைந்துள்ளன. மூலத்தானத்தில் மிக அழகிய புத்தர் திருவுருவம் காணப்படுகின்றது.

இக்குகைகள் யாவும் மிக்க வேலைப்பாட்டுடன் விளங்குகின்றன. தச்சர்கள் மரத்தில் உளிகொண்டு செதுக்கிச் செய்யும் மிக நுட்பமான வேலைப்பாடுகளை எல்லாம் சிற்பிகள் இங்கே கல்லில் செதுக்கிக் காட்டியுள்ளனர். ஒரே குன்றைக் குடைந்து கூடம், தூண்கள், சுற்று மதில்கள், மூலத்தானம், அறைகள் ஆகியவற்றை யெல்

லாம் அமைத்துள்ள திறமையை நேரில் கண்டு மிகவும் வியந்தோம். சைத்தியம் என வழங்கப்படும் பத்தாவது குகைதான் பௌத்தக் குகையில் சிறந்ததாய் அரிய சிற்ப நுட்பங்கள் அமையப் பெற்று விளங்குகின்றது. அதனுல் அது விச்வகர்மாவின் குகை என வழங்கப்படுகிறது. விச்வகர்மா என்பவன் சிற்பக் கலைகளுக்கே தலைவனுக விளங்கும் தெய்வத் தச்சனன்றே? இக்கோயிலில் காற்றும் வெளிச்சமும் நன்கு பரவுவதற்கேற்ற சன்னல்களையும் குடைந்து அமைத்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும். இங்ஙனம் பௌத்த சமயக் குகைகளைக் காண்பதற்குள் அன்று பொழுது போய்விட்டது. அதனுல் நாங்கள் எங்கள் இடம் திரும்பினேம்; இரவு உணவு உண்டு நாங்கள் கண்ட அக்காட்சிகளின் சிறப்பைப்பற்றி அளவளாவிய வாறே அயர்ந்து உறங்கினேம்.

மறுநாள் வைகறையிலேயே துயில் உணர்ந்தோம்; நீராடிக் காலை உணவுண்டோம்; பிற்பகல் உணவிற்கு வேண்டியவற்றையும் எடுத்துக்கொண்டு எல்லோராக் குகைகளை அடைந்தோம்; இந்து சமயத்தைச் சார்ந்த குகைக் கோயில்களை வரிசையாகக் கண்டு மகிழ்ந்தோம். அக்குகைகளில் சிவபெருமான் உமாதேவியோடு எழுந் தருளியுள்ள காட்சியைச் சிற்பிகள் பற்பல வகையாகச் செதுக்கியுள்ளனர். பதினுன்காவது கோயிலில் ஒரு மண்டபம் உள்ளது. அங்கு நடராசர், காளி, திருமால், இலக்குமி ஆகியவர்களின் உருவங்களும் இராவணன் கயிலையைப் பெயர்க்கும் காட்சியும் சுவர்களில் அழகாகச் செதுக்கப்பட்டுள்ளன. பதினைந்தாவது கோயில் **தசாவ தாரக் கோயில்** எனக் கூறப்படுகின்றது. இக்கோயிலில் சைவ வைணவச் சிற்பங்கள் உள்ளன. இங்குச் சிவ பெருமான் காலபைரவ வடிவத்தோடு காட்சி அளிக்கிருர். இவற்றையெல்லாம் பார்த்து வியந்தவாறே நாங்கள் புகழ் பெற்ற கயிலாயக் கோயிலை அடைந்தோம்.

எல்லோராவில் உள்ள கோயில்கள் யாவும் பிறை வடிவமாக அமைந்துள்ளன. அவற்றுள் நடு நாயகமாக விளங்குவது **கயிலாயக் கோயில்**. அக்கோயில் சிற்பக்

கலைக்கே சிகரமாகவிளங்குகிறது. அக்கோயிலில் அமைந்த ஆயிரக் கணக்கான அற்புதச் சிற்பங்களையும், மரத்திலும்



கயிலாயக் கோயில்

மெழுகிலும் செய்தமைக்கக் கூடிய நுண்ணிய வேலைப்பாடு களைக் கல்லில் செதுக்கி அமைத்திருப்பதையும் காணும் போது அவற்றைப் படைத்த சிற்பிகள் தெய்வத் தச்சர் களோ என்று எண்ணி அனைவரும் வியப்பர் என்பதில் ஐயம் இல்லை. நம் நாட்டு இலக்கியங்களில் கூறப்படும் கயிலாயக் காட்சியை மனத்திற் கொண்டு அழகே உருவ மான ஆண்டவனுக்கு என்றும் அழியாத பேரழகின் நிலைக் களமாக அக்கோயிலை அமைத்துள்ளனர் சிற்பிகள்.

கயிலாயக் கோயிலில் நுழைந்ததும் முதலில் நாங்கள் நந்தி விமானத்தைக் கண்டோம். அம்மண்டபம் இரண் டடுக்குக்களை உடையதாய் அமைந்துள்ளது. அதன் விமானம் அழகிய சிற்ப வேலைப்பாடுகளுடன் திகழ் கின்றது. அதன் அடிப்பாகத்தில் நந்தியின் கம்பீரமான

உருவம் உள்ளது. இம்மண்டபத்தின் இருபுறமும் ஒரே மாதிரியாகச் செய்யப்பெற்ற வேலைப்பாடமைந்த இரண்டு கற்றூண்கள் நிற்கின்றன. அவற்றை இரண்டு யானைகள் சுமந்து நிற்கின்றன. தூண்களின் உச்சியில் சிவபெருமானது முத்தலைவேல்கள் அடையாளமாகப் பொலிகின்றன. அத்தூண்களின் பக்கத்தில் கங்காதேவியின் கோயில் அமைந்துள்ளது. அக்கோயில் எக்காரணத்தாலோ முற்றுப் பெருமல் அரை குறையாக நின்று விட்டது.

நந்தி விமானத்திற்கு எதிரே தொண்ணூற்ருறு அடி உயரம் உள்ள பெரிய விமானத்தையுடைய கயிலாய நாதர் கோயில் காட்சி அளிக்கின்றது. அவ்விமானத்தின் அழகைப் பார்க்கப் பதினுயிரம் கண்கள் வேண்டும் எனத் தோன்றியது. அக்கோயிலின் அடிப்பீடமே இருபத்தேழு அடி உயரம் உள்ளதாக இருக்கின்றது. யானைகள் நாற்புறமும் வரிசை வரிசையாக அப்பீடத்தைச் சுமந்து நிற்கின்றன. அக்காட்சி கயிலாயத்தையே யானைகள் சுமந்து நிற்பனபோல் உள்ளது. அந்த யானைகள் யாவும் உயிருள்ளன போலவே காட்சியளிக்கின்றன. அக்கோயிலையும் முன்னுள்ள நந்தி மண்டபத்தையும் ஒரு பெரிய கற்பாறை பாலம்போல் அமைந்து இணைக்கின்றது.

கயிலாயக் கோயிலில் உட்சென்றவுடன் ஓர் அழகான மண்டபத்தைக் கண்டோம். அஃது ஐம்பத்து மூன்றடி சதுரமாக அமைந்துள்ளது. பதினுறு தூண்கள் அம் மண்டபத்தைத் தாங்குகின்றன. அத்தூண்கள் யாவும் மிக்க வேலைப்பாடுடையன. மண்டபத்தை அடுத்து மூலத்தானக் கோயிலின் வாயில் அமைந்துள்ளது. அவ்வாயிலின் அழகைச் சொற்களால் உணர்த்த முடியாது; நேரில் கண்டே அநுபவிக்க வேண்டும். வாயிலைக் கடந்து சென்ருல் மூலத்தானத்தை அடையலாம். அங்கு இலிங்க உருவம் விளங்குகின்றது. மூலத்தானத்தைச் சுற்றி வலம் வரச் சுற்று மண்டபமும் அமைக்கப்பட்டுள்ளது. அதில் விநாயகர், முருகன் உமாதேவி முதலியவர்க்குரிய கோயில்கள் அழகாக அமைந்

துள்ளன. மூலத்தானக் கோயிலின் மீதும் அழகிய விமானம் ஒன்று உள்ளது. அம் மூலத்தானக் கோயிலையும், நீண்ட தந்தங்களும் துதிக்கைகளும் உடைய யானைகள் சுமந்து கொண்டு நிற்கின்றன. அக்கோயிலில் சிற்பங்கள் இல்லாத தூண்களையோ சுவர்களையோ காணல் இயலாது. பலவகைக் கொடிகள், பூக்கள், அன்னம், மயில் முதலிய அழகிய காட்சிகள் எங்கும் நிரம்பி அழிவற்ற அலங்காரக் குவியலாகவே காட்சியளிக்கின்றன.

இந்த அதிசயக் கோயிலைக் கண்ட நாங்கள் வியப்பே உருவமானோம். எங்களுக்கு ஒரு பெரிய ஐயம் உண்டாகியது. நாற்புறமும் சிற்பக் குவியல்களும் இடையே மூலத்தானமும் அதனை அடுத்து மண்டபமும் வாயிலும் விமானமும் அமைந்த இப்பெரிய கோயிலை ஒரே குன்றில் எப்படிச் செதுக்கி அமைத்தார்கள் என்பதே எங்கட்கு உண்டாகிய ஐயம். ஐயத்தை ஆசிரியர்பால் வினவினோம். அவர் பின்வருமாறு விளக்கம் கூறினார்.

"இக்கோயிலை அமைப்பதற்கு முன் சிற்பிகள் கோயிலின் அமைப்பை மனத்திலேயே நிருமாணித்துக் கொண்டனர். அதற்கேற்ப 280 அடி நீளமும் 160 அடி அகலமும் உடைய சதுரமான பகுதியைத் தேர்ந்தெடுத்தனர். அதனைச் சுற்றி நாற்புறமும் சுமார் இருபதடி அகலமுள்ளதும் நூற்றைம்பது அடி ஆழம் உள்ளதுமான பெரிய பள்ளத்தைக் குடைந்தெடுத்தனர். இச்செயல் எவ்வளவு அருமையானது என்பதனை நினைத்துப் பாருங்கள். பின்னர் நடுவே நின்ற திட்டில் மூலத்தானம், சுற்று மண்டபம், முன்புற மண்டபம், விமானம், வாயில் ஆகியவற்றையெல்லாம் குடைந்து அமைத்தனர். பள்ளத்தைக் கடந்து வெளியே இருந்த மலைப்பகுதியில் முன்வாயில், பெரிய விமானம், பீடம் ஆகியவற்றை வகுத்துக்கொண்டு செய்தனர். ஒரே கல்லைக் குடைந்து கோயில் அமைப்பதில் கவனக் குறைவால் சிறு தவறு ஏற்பட்டாலும் அதனைத் திருத்தி அமைக்க முடியாமல் முழுதுமே பயனற்றதாய் விடுமன்றோ! அதனைச் சிந்தித்துப் பார்த்தால்தான் இதனை உருவாக்கிய சிற்பி

களின் அரிய கலைத்திறமையின் சிறப்பு விளங்கும். இத்தகைய சிறப்பினாலேயே இக்கோயில் உலக அதிசயங்களில் எட்டாவது அதிசயம் என்று போற்றப்படுகின்றது.''

இங்ஙனம் ஆசிரியர் உரைக்கக் கேட்டு நாங்கள் பெருவியப்படைந்தோம். பின்னர் மற்றைய கோயில்களையும் கண்டு களித்து, டுமார்லேனா என்று கூறப்படும் இருபத்தொன்பதாவது கோயிலை அடைந்தோம். இக்கோயில் மிகப் பெரிதாக நூற்றைம்பது அடிகளுடைய பெரிய கூடமாக அமைந்துள்ளது. இதனுட் செல்ல அழகிய வேலைப்பாடமைந்த மூன்று வாயில்கள் உள்ளன. இக்கோயிலின் இருபக்கங்களிலும் ஆறுகள் பாய்ந்து மலையை அறுத்துக் கொண்டு சென்ற அடையாளம் காணப்படுகிறது. இப்பகுதிகளிலும் கோயிலினுட் செல்வதற்குப் படிகள் அமைக்கப்பட்டுள்ளன. உட்புறச் சுவரில் சிவபெருமான் உமாதேவியை மணக்கும் காட்சி சுவர்ச் சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது. வாயிலில் சிங்கங்கள் காவல் செய்வனபோல் அமைக்கப்பட்டுள்ளன. இதனைக் கண்ட பின்னர் நாங்கள் மற்றும் உள்ள குகைக் கோயில்களையும் கண்டு களித்தோம். அவற்றில் குறிப்பிட்டுக் கூறத்தக்கன இல்லையேனும் யாவும் ஒப்பற்ற சிற்பக்கலை செறிந்த கலைக் கூடங்களாகவே விளங்கின. அவற்றையெல்லாம் கண்டு நிறைந்த மனத்துடன் நாங்கள் சென்னை வந்தடைந்தோம்.

இங்ஙனம் எல்லோராவில் நாங்கள் கண்ட காட்சி எங்கள் வாழ்வில் என்றுமே மறக்க முடியாததாகும். அக்காட்சியின் சிறப்பினை வாயாற் சொல்லியோ, எழுத்தால் எழுதியோ முற்றும் அறிவித்துவிடல் இயலாது. நேரே சென்று கண்டால் தான் அதன் பெருமையை உணர்ந்து அநுபவிக்க முடியும். ஆதலால் நீங்களும் வாய்ப்பு ஏற்பட்டால் எல்லோராவைக் கண்டு இன்புறத் தவறுதீர்கள்.

### அருஞ்சொல் விளக்கம்

இசை - பாட்டு, சங்கீதம்; கவிதை - செய்யுள்; சின்னம் - அடையாளம்; பண்டு - முற்காலம்; வண்ணம் - நிறம்; ஏனைய - மற்றைய; பொலிகின்றன - விளங்குகின்றன; அளவளாவுதல் - மகிழ்ந்து உரையாடுதல்; வைகறை - சூரியன் உதிப்பதற்கு முன் நான்கு மணி நேரம்; நிருமாணித்தல்-அமைத்தல்; மூலத்தானம்-இறைவன் எழுந்தருளியுள்ள இடம்; செறிந்த - நிறைந்த.

### வினாக்கள்

1. ஓவியம், சிற்பம்—இவற்றிடையே உள்ள வேற்றுமையை விளக்குக.

2. நம் நாட்டில் சிற்பங்களும் ஓவியங்களும் செறிந்த இடங்களில் குறிப்பிடத்தக்கன யாவை?

3. எல்லோரா எங்கு அமைந்துள்ளது?

4. எல்லோராக் குகைகளின் வகைகளைக் குறிப்பிடுக. அவை எவ்வெக்காலத்தில் ஏற்பட்டன?

5. கயிலாயக் கோயில் அமைக்கப்பட்ட வரலாற்றை விளக்குக.

6. விகாரம், சைத்தியம்—இவற்றிடையே உள்ள வேறுபாட்டைக் குறிப்பிடுக.

7. விசுவகர்மாவின் குகை, தசாவதாரக் கோயில், டுமார்லேனு— குறிப்பு வரைக.

8. கயிலாயக் கோயிலின் அமைப்பையும் சிற்பச் சிறப்பையும் சுருக்கி வரைக.

9. கயிலாயக்கோயில் அமைக்கப்பட்ட முறையை விளக்கி எழுதுக.

### மொழிப் பயிற்சி

I. பிரித்து எழுதுக:—ஒன்றேடொன்று, கோயிற்பணி, இடையூறின்றி, சிற்பக்கலை, கற்றூண்கள், முத்தலை, தொண்ணூற்ருறு.

II. சொந்த வாக்கியங்களில் அமைத்தெழுதுக:—நடு நாயகமாக, சிகரமாக, அரை குறையாக, சூழ்நிலை, நடமாட்டம், சின்னம், வரிசை வரிசையாக, நிருமாணித்து.

III. 'எல்லோராச் சிற்பச் சிறப்பு' என்பது பற்றி ஒரு பக்கத்தில் கட்டுரை எழுதுக.

IV. நீங்கள் விடுமுறை நாட்களில் புரிந்த இன்பச் செலவைப்பற்றி நண்பனொருவனுக்குக் கடிதம் எழுதுக.

## இலக்கணம்

தாமரை முகம்—இத்தொடரில் உள்ள தாமரை என்னும் சொல் முகம் என்னும் குறிப்பினுல் கொடியைக் குறிக்காமல் மலரை உணர்த்துவதை அறிகிறோம். இவ்வாறு குறிப்பால் பொருள்படும் சொற்கள் குறிப்புச் சொற்கள் எனப்படும்.

(உ-ம்.) ஆயிரம் மக்கள் போர் புரிந்தனர். மக்கள் என்னும் சொல் போர் என்னும் குறிப்பால் வீரரை உணர்த்தியது.

குந்தியின் மைந்தர் ஐவரும் வந்தனர்—குந்தி என்னும் குறிப்பால் ஐவர் என்னும் சொல் பாண்டவரைக் குறித்தது.

ஆயிழை வந்தாள்—வந்தாள் என்னும் குறிப்பினுல் ஆயிழை என்பது பெண்ணைக் குறித்தது.

மாடுகள் உழுதன—உழுதன என்ற குறிப்பால் மாடுகள் என்னும் சொல் எருதுகளைக் குறித்தது.

இங்ஙனம் ஆகு பெயர், அன்மொழித் தொகை ஆகிய சொற்கள் குறிப்பால் பொருளுணர்த்துவனவாம்.

# 8. கொடை வள்ளல் சீதக்காதி

நம் நாடு வழி வழி வள்ளல்கள் பலர் வாழ்ந்த பெரு நாடு. பண்டைக் காலத்தில் முடியுடை மூவேந்தரும் குறு நில மன்னரும் கடையெழுவள்ளல்களும் வறுமையால் வாடி வருந்திய தமிழ்ப் புலவர்களுக்கு உணவும் உடையும் பொன்னும் மணியும் நிலமும் குறைவின்றி வழங்கி அவர்கள் வறுமை களைந்தனர். அதனால் அவர்கள் பைந்தமிழ்ப் பயிரைப் பண்புடன் வளர்த்தனர். தமிழில் பற்பல கலைச் செல்வங்களும் பூத்துக் கனிந்தன. மூவேந்தரும் போய் முச்சங்கமும் அற்று ஆதரிப்பார் யாருமில்லாமல், புலவர் ஆடிக் காற்றில் அகப்பட்ட பஞ்செனை வாடி வருந்தும் போதெல்லாம் நம் நாட்டில் வாழ்ந்த பெருஞ் செல்வர்கள் பலர் அவர்கட்கு வரையாது வழங்கி அவர்கள் வாட்டத்தைப் போக்கி நாட்டில் தமிழ்ப் பயிரை வளர்த்து வந்துள்ளனர். அத்தகைய வள்ளல் பெருமக்களில் ஒருவர் சீதக்காதி என்னும் செம்மலாவார்.

சீதக்காதி என்பவர் கி. பி. பதினேழாம் நூற்றாண்டில் காயல் பட்டினம் என்னும் ஊரில் பிறந்தவராவர். காயல் பட்டினம் தென்னாட்டில் புகழ்பெற்ற துறைமுகப் பட்டினமாக விளங்கிய சிறப்புடையதாம். அதனால் கப்பல் வாணிகர் பலர் அந்நகரில் வாழ்ந்தனர். அவர்களில் முகம்மதியரும் பலராவர். அவர்கள் மரக்காயர் என வழங்கப்பட்டனர். மரக்கலம் மூலம் வாணிகம் செய்தமையால் மரக்கல மன்னர் எனப் பொருள்படும் மரக்கலராயர் என்று வழங்கிய சொல்லே நாளடைவில் மரக்காயர் என வழங்கலாயிற்று. அத்தகைய புகழ்மிக்க வணிகக் குடும்பமொன்றிலேயே நம் சீதக்காதி பிறந்தார். அவரது இயற்பெயர் ஷேக் அப்துல் காதர் மரக்காயர் என்பதாகும். அப்பெயர் பிற்காலத்தில் அவரைப் பற்றிப் பாடிய புலவர் பெரு மக்களால் பாட்டில் அமைத்துப் பாடுவதற்கேற்ற வகையில் சீதக்காதி என வழங்கப்பட்டது.

சீதக்காதி இளமையிலேயே அறிவும் ஆற்றலும் வாய்ந்து விளங்கினர்; 'நட்பும் தயையும் கொடையும்

பிறவிக்குணம்' என்பதற்கேற்ப அருள் உள்ளமும் ஈகைக் குணமும் பிறவிலேயே வாய்க்கப் பெற்றவராகத் திகழ்ந் தார். அதனுல் அக்காலத்தில் சிறந்த அறிஞராகவும் அரசர்களும் போற்றும் மதிப்புடையவராகவும் விளங்கிய **சதக்கத்துல்லா** என்னும் துறவி இவருடைய நண்ப ராஞர். அப் பெரியாருடைய முயற்சியால் டில்லியை ஆண்ட ஔரங்கஜீப் என்னும் பேரரசரின் நட்பு சீதக் காதிக்குக் கிடைத்தது. அந்நட்பின் பயனுகச் சிறிது காலம் அவர் வங்காளத்தின் அரசியல் தலைவராகப் பதவி வகித்துப் பொறுப்புடன் அரசியல் நடத்திப் புகழ்பெற்ருர்; எனினும் அந்நாட்டின் தட்ப வெப்ப நிலை அவருக்கு இடையூறு செய்தமையால் அதனைத் துறந்து தமிழ் நாட்டை அடைந்தார்.

சீதக்காதியின் கூர்மையான அறிவுத் திறமையும் அரசியல் அநுபவமும் அக்காலத்தில் இராமநாதபுரத்தை ஆண்ட **விசய ரகுநாத சேதுபதியின்** உள்ளத்தைக் கவர்ந்தன. ஆதலால் அம்மன்னர் சீதக்காதியைத் தம் அமைச்சராகக் கொண்டார். சீதக்காதி அமைச்சுத் தொழிலை அனைவரும் போற்றும் வண்ணம் ஆற்றி வந்த துடன் அருந்தமிழை வளர்க்கும் பணியிலும் ஈடுபட்டார். அப்போது அவரை நாடி வந்து தங்கள் தமிழ்ப் புலமை யைக் காட்டி அவரிடம் வரிசைகள் பெற்ற புலவர் பலராவர். அவர்களில் **உமறுப் புலவர்** என்பவர் மிகச் சிறந்தவராவர். அவர் முகம்மதிய மதத்தைச் சார்ந்த சிறந்த தமிழ்ப் புலவர்; முகம்மது நபியின் வரலாற் றைச் **சீருப் புராணம்** என்னும் பெயரில் அரிய காவிய மாகப் பாடியுள்ளார். அந்நூலை இயற்றத் தூண்டி ஆதரித்தவர் வள்ளல் சீதக்காதியே ஆவர். இங்ஙனம் பலரும் போற்றும் பண்புடையவராக விளங்கிய சீதக்காதி யின் பேருதவியால் இராமநாதபுரம் கோட்டை கட்டி முடிக்கப்பட்டது. அதனுல் அவரிடம் பேரன்பு கொண்ட சேது வேந்தர் அவருக்கு '**விசய ரகுநாதன்**' என்னும் பட்டத்தினை அளித்து அவரைத் தம் தம்பியெனப் போற் றினர். அதுமுதல் அவரை மக்கள் '**ஷேக் அப்துல் காதர்**

விசய ரகுநாதப் பெரிய தம்பி மரக்காயர்' எனப் போற்றலாயினர்.

பின்னர், சீதக்காதி அரசியல் வாழ்க்கையை விட்டுக் காயல் பட்டினம் அடைந்து தம் குடும்பத் தொழிலாகிய வாணிக வாழ்க்கையை மேற்கொண்டனர்; அலைகடல் நடுவில் பலகலம் செலுத்தி வாணிகம் புரிந்து பெரும் பொருள் ஈட்டினர். குன்றெனக் குவிந்தது செல்வம். ஆதலால் மக்கள் அவரை 'இருநிதிக் கிழவன்' என்றும், 'வணிக மன்னர்' என்றும் போற்றலாயினர். ஏரி நிறைந்தனைய செல்வம் படைத்த வள்ளல் 'செல்வத்துப் பயனே ஈதல்' என்னும் மெய்யுரையை அறிந்தவராதலால் ஆதரவற்றவர்களையும், வறிஞரையும் தாயெனப் பேணிக் காத்தார்; தம்மை நாடி வந்த புலவர்களுக்குப் பெரும் பொருள் வழங்கிப் போற்றிப் புலவர் புரவலராய் விளங்கி வந்தார்.

ஒரு சமயம் அந்நாட்டில் பெரும் பஞ்சம் ஏற்பட்டது. மழை பொழியாக் காரணத்தால் விளைவு குன்றியது. பொன்னுக்குச் சரியாக நெல் விற்கப்பட்டது. பசிப்பிணி என்னும் பாவி மக்களை வாட்டி வருத்தினன். உண்ண உணவின்றி ஒட்டிய வயிறும், உட்குழிந்த கண்களும் உடையவராய் வறுமையின் கோர உருவமாய் மக்கள் காட்சியளித்தனர். அத்தகைய கொடும் பஞ்சத்திலும் கன்மனம் படைத்த பெருஞ் செல்வர் பலர் அவர்கட்கு உதவி செய்து காக்க முன்வரவில்லை. ஆனால் இரக்கத்தின் திருவுருவமாய் விளங்கிய வள்ளல் சீதக்காதி மக்களின் பெருந் துன்பத்தைக் கண்டு மனம் உருகி, "உங்களைக் காக்க நான் இருக்கின்றேன்! அஞ்சாதீர்கள்" என்று ஆறுதல் உரைத்து அவர்கட்கெல்லாம் உணவும் உடையும் வழங்கிப் போற்றினர். பசி நீங்கி இன்புற்ற மக்கள் தம் பசிப்பிணி தீர்த்த மருத்துவனாக விளங்கிய அவரை வாயார மனமார வாழ்த்தினர். அவர்களுடைய இன்முகத்தைக் கண்டு வள்ளல் கொண்ட மகிழ்ச்சி சொல்லும் தரத்ததோ!

உள்ளுந் தோறும் இனிக்கும் பொது மறையை

இயற்றிய வள்ளுவப் பெருந்தகையார் நல்லாரிடம் பொருந்திய செல்வமானது ஊராரால் நீர்முகந்து உண்ணப் பெறும் கிணறு நீர் நிறைந்தாற் போலவும், பயன்தரு நன்மரம் ஊர் நடுவே பழுத்து விளங்குவது போலவும் பலர்க்கும் பயன்படும் என்று கூறியுள்ளார்.

> "ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
> பேரறி வாளன் திரு"
> "பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
> நயனுடை யான்கட் படின்"

என்பன அவர் வாய் மொழிகள். அம் மொழிகளுக்கு ஏற்ற உதாரணமாய் விளங்கிய சீதக்காதியின் புகழ் தமிழ் நாடெங்கும் பரவியது. அதனால் இரவலர் பலர் பழுத்த மரத்தை நாடிச் செல்லும் பறவைகளைப் போல அவரை நாடி வந்தனர். அவர்கட்கெல்லாம் செம்பொன் பிடிப் பிடியாய் வாரி வழங்கினார் வள்ளல். கற்பக தருவைப் போல வரையாது வழங்கிய வள்ளலோடு ஒப்பிடும்போது ஈயாத உலோபிகள் புலவர்கட்கு எட்டி மரமாகத் தோன்றினர். ஆதலின் 'ஈயாத புல்லர் இருந்தென்ன போய் என்ன?' என்று உள்ளம் நொந்து கூறினர்.

இங்ஙனம் வரையாத ஈகையால் பேரிசை கொண்டு வாழ்ந்த வள்ளல் சீதக்காதியையும் கண்ணில் காலன் கவர்ந்து கொண்டான். அதனால் புலவர்களும் பொது மக்களும் அடைந்த வருத்தத்திற்கு அளவு உண்டோ! அவர்கள் கொழு கொம்பற்ற கொடி போல ஆதரிப்பாரின்றி வருந்தினர். வள்ளல் சீதக்காதி தாம் இறக்கும் போது தம் விரலில் அணிந்த மோதிரத்தை மட்டும் கழற்றாமல் தம்முடலை அடக்கம் செய்யுமாறு பணித்தார். அதன்படியே அவர் பொன்னுடல் அடக்கம் செய்யப் பட்டது.

சீதக்காதியால் மிகவும் ஆதரித்துப் போற்றப்பட்ட புலவர் படிக்காசுப் புலவராவர். சீதக்காதி மறைந்த போது அவர் அங்கு இல்லை; பல நாட்கள் கழித்துக் காயல் பட்டினம் வந்த படிக்காசர் தம்மை ஆதரித்துப் போற்றிய

வள்ளல் மறைந்த செய்தி கேட்டு மிக்க துன்பம் கொண்டார்; சீதக்காதி அடைக்கலம் செய்யப்பட்ட இடத்தைக் கண்டு கண்ணீர் விட்டுக் கதறினர்.

"பெருஞ் செல்வராகிய காயல் துரை சீதக்காதி 'இல்லை' என்று வந்தோர்க்கு 'இல்லை' என்று கூருமல் ஈந்து புகழ்க் கம்பம் நாட்டி வைத்தார். அத்தகைய வள்ளல் அவரை நம்பி வாழ்ந்த புலவர்களை ஒட்டாண்டிகளாக்கி அவர்கள் வாயில் ஒரு பிடி மண்ணைப் போட்டுச் சமாதிக் குழிக்குள் மறைந்துவிட்டார். இனி இவ்வுலகில் பூமாது இருந்து என்ன? புவிமாது இருந்து என்ன? நாமாது இருந்துதான் பயன் என்ன? கொடை மிகுந்த சீமானகிய சீதக்காதி இறந்தபோதே புலவர்களின் புலமையும் செத்துவிட்டது. அவர் திரும்பி வந்து பிறந்தாலொழியப் புலவர்கட்கு இனி வாழ்வு ஏது?" என்று படிக்காசர் உள்ளம் உருகப் பாடிப் புலம்பினர். அச்சமயத்தில் வியத்தகு நிகழ்ச்சி ஒன்று நேர்ந்தது. அடக்கம் செய்யப்பட்ட சீதக்காதியின் மோதிரமணிந்த கை திடீரென்று வெளிப்பட்டது. அதைக் கண்டார் படிக்காசர். தாம் பாடிய பாடல்களைக் கேட்டு உளமகிழ்ந்து பரிசு அளிக்கும் அவ்வள்ளல், இறந்த பின்னும் தம் பாடலைக் கேட்டுப் பரிசீந்த பான்மையை எண்ணி வியந்தார். இறந்த பின்னும் ஈகை மாருத சீதக்காதியின் வள்ளன்மையை வியந்து, "கற்பக தருவைப் போலக் கொடை கொடுக்கும் கையையுடையவனுகிய சீதக்காதி இறந்தும் தன் மோதிரத்தை ஈந்த இவ்வருஞ் செயல் தமிழ்ச் சுவையறியாத புல்லர்களிடம் சென்று 'தா' என்று கையேந்தி நிற்காமல் இருப்பதற்கு விதித்த தடையேயாகும்," என்று கூறி அம்மோதிரத்தைக் கழற்றிக்கொண்டு அவர் புகழை வாழ்த்திச் சென்றனர். இத்தகைய அரிய நிகழ்ச்சியால் '**செத்தும் கொடை கொடுத்தான் சீதக்காதி**' என்று தமிழ் நாடு அவ்வள்ளலைப் போற்றிக் கொண்டாடியது.

## அருஞ்சொல் விளக்கம்

கடையெழு வள்ளல்கள் - காரி, பாரி, ஓரி, ஆய், நள்ளி, அதியமான், பேகன் என்னும் ஏழு வள்ளல்கள்; அற்று - அழிந்து; வரையாது - எல்லையின்றி; செம்மல் - உயர்ந்தோர்; பட்டினம் - கடற்கரையை அடுத்த ஊர்; தட்பம் - குளிர்ச்சி; பணி - தொண்டு; வரிசைகள் - சிறப்புக்கள்; கலம் - கப்பல்; இருநிதிக் கிழவன் - மிக்க செல்வம் படைத்தவன், குபேரன்; கோர உருவம் - பயங்கரமான உருவம்; உள்ளுதல் - நினைத்தல்; ஊருணி - கிணறு; நயன் - கொடைத் தன்மை; இரவலர் - யாசகர்; பேரிசை - பெரும் புகழ்; கண்ணில் காலன் - கண்ணற்ற (இரக்கமற்ற) இமயன்; பூமாது - இலக்குமி; புவிமாது - பூமிதேவி; நாமாது - கலைமகள்; புல்லர் - அற்பர்.

## வினாக்கள்

1. தமிழ் மொழியில் பற்பல கலைச் செல்வங்கள் தோன்றியிருக்கக் காரணம் என்ன?

2. சீதக்காதி எத்தகைய செல்வர்களுள் ஒருவர்?

3. சீதக்காதியின் இயற் பெயர் யாது? அவர் சீதக்காதி என வழங்கப்படக் காரணம் யாது?

4. அவர்தம் பிறப்பு, குடிப் பெருமை ஆகியவற்றை விளக்குக.

5. சீதக்காதி வங்காளத்தில் வகித்த உத்தியோகம் யாது? அஃது அவருக்கு எங்ஙனம் கிடைத்தது?

6. 'விசயரகுநாதப் பெரிய தம்பி மரக்காயர்' என்ற சிறப்புப் பெயர் சீதக்காதிக்கு யாரால் எக்காரணம் பற்றி வழங்கப் பெற்றது?

7. சீதக்காதி எங்ஙனம் பெரும் பொருளீட்டினர்? அதனை அவர் எங்ஙனம் பயன்படுத்தினர்?

8. சீதக்காதியின் கொடைச் சிறப்பை ஒருதாரணம் தந்து விளக்குக.

9. நல்லவரிடம் பொருந்திய செல்வத்துக்குத் திருவள்ளுவர் தந்த உதாரணங்கள் யாவை?

10. 'பழுத்த மரத்தை நாடிச் செல்லும் பறவைகள் போல்'—இவ்வுவமையைச் சந்தர்ப்பந் தோன்ற விளக்குக.

11. சீதக்காதி இறந்தமை அறிந்த படிக்காசுப் புலவர் வருந்திக் கூறியன யாவை?

12. 'செத்தும் கொடை கொடுத்தான் சீதக்காதி'—என்னும் தொடர் வழங்கக் காரணம் என்ன?

## மொழிப் பயிற்சி

I. பிரித்தெழுதுக :—பூத்துக்கனிந்த, குடும்பமொன்றில், என்பதற்கேற்ப, மெய்யுரை, உட்குழிந்த, தாமுடைமை, பேரிசை, பரிசீந்த.

II. சேர்த்து எழுதுக : பசுமை + தமிழ் ; தெற்கு + நாடு.

III. சொந்த வாக்கியங்களில் எழுதுக :—வழி வழி, தட்ப வெப்ப நிலை, இடையூறு, வாயார, மனமார, வரையாது, உள்ளமுருக.

IV. இப்பாடத்தில் வந்துள்ள உவமைத் தொடர்களை ஏற்றவாறு வாக்கியங்களில் பொருத்தி எழுதுக :—

1. வீமனின் தோள்கள் —— திரண்டு விளங்கின.
2. நிஜாம் அரசர் —— செல்வம் படைத்தவர்.
3. ஆசிரியர் மாணவரை —— பேணிக் கல்வி கற்பிக்கிறார்.
4. கர்ணன் —— வரையாது வழங்கினான்.
5. புலவர்கள் —— பாரி வள்ளலை அணுகிப் பரிசு பெற்றனர்.
6. போரில் —— வீரர்கள் நாற்புறமும் சிதறி யோட்டம் பிடித்தனர்.

## இலக்கணம்

1. நிலம், வாயில், தஞ்சை—இச்சொற்கள் இயல்பாக நின்று அப்பொருள்களை உணர்த்துகின்றன. இவை இயல்பு வழக்கு எனப்படும். இயல்பு வழக்கு மூன்று வகைப்படும்.

(1) கல்—இலக்கண முடையது.

(2) முன்றில்—இல் முன் என்பதை மாற்றிக் கூறுவதால் இலக்கணப் போலி.

(3) மயிலை—மயிலாப்பூர் என்ற சொல் மயிலை எனச் சிதைந்து வழங்குவது மரூஉ.

2. வெளிப்படையாகக் கூறத்தகாத சொற்களைத் தகுதியறிந்து மாற்றிக் கூறுவது தகுதி வழக்கு எனப்படும். இது மூன்று வகைப்படும்.

(1) கால் கழுவினான்—இடக்கரடக்கல் : பலர் முன் சொல்லத்தகாத வார்த்தையை மறைத்துக் கூறுதல்.

(2) சீதக்காதி துஞ்சினான்—மங்கலம் : இறந்தான் என்று அமங்கலமாகக் கூறாமல் தூங்கினான் என மங்கலமாகக் கூறுதல்.

(3) மதி வெள்ளை கொடு—குழூஉக்குறி : ஒரு கூட்டத்தார் பிறர் அறியாமல் தமக்குள் அறியுமாறு கூறும் சொல். (மதிவெள்ளை - ஒரு ரூபாய்.)

# செய்யுட் பகுதி

## I. கடவுள் வணக்கம்

விண்ணும் மண்ணும் தனியாளும்—எங்கள்
வீரை சக்தி நினதருளே—என்றன்
கண்ணும் கருத்துமெனக் கொண்டு—அன்பு
கசிந்து கசிந்து கசிந்துருகி—நான்
பண்ணும் பூசனைகள் எல்லாம்—வெறும்
பாலை வனத்திலிட்ட நீரோ—உனக்கு
எண்ணும் சிந்தனை யொன்றிலையோ—அறி
வில்லா தகிலம் அளிப்பாயோ? (1)

தேடிச் சோறுநிதம் தின்று—பல
சின்னஞ் சிறுகதைகள் பேசி—மனம்
வாடித் துன்பம்மிக உழன்று—பிறர்
வாடப் பலசெயல்கள் செய்து—நரை
கூடிக் கிழப்பருவம் எய்திக்—கொடுங்
கூற்றுக் கிரையெனப்பின் மாயும்—பல
வேடிக்கை மனிதரைப் போலே—நான்
வீழ்வே னென்றுநினைத் தாயோ? (2)

தோளை வலியுடைய தாக்கி—உடற்
சோர்வும் பிணிபலவும் போக்கி—அரி
வாளைக் கொண்டுபிளந் தாலும்—கட்டு
மாறு உடலுறுதி தந்து—சுடர்
நாளைக் கண்டதோர் மலர்போல்—ஒளி
நண்ணித் திகழுமுகம் தந்து—மத
வேளை வெல்லுமுறை கூறித்—தவ
மேன்மை கொடுத்தருளல் வேண்டும். (3)

எண்ணும் காரியங்கள் எல்லாம்—வெற்றி
ஏறப் புரிந்தருளல் வேண்டும்—தொழில்
பண்ணப் பெருநிதியம் வேண்டும்—அதில்
பல்லோர் துணைபுரிதல் வேண்டும்—சுவை
நண்ணும் பாட்டிெனொடு தாளம்—மிக
நன்று உளத்தழுந்தல் வேண்டும்—பல
பண்ணிற் கோடிவகை இன்பம்—நான்
பாடத் திறனடைதல் வேண்டும். (4)

—சுப்பிரமணிய பாரதியார்

## ஆசிரியர் குறிப்பு

சுப்பிரமணிய பாரதியார்: தேசீய கவி எனப் புகழ்பெற்ற பாரதியார் தமிழ் மக்களிடையே சுதந்திர உணர்ச்சியைப் பரப்பியவர். இவர் பிறந்த ஊர் எட்டயபுரம் ஆகும். சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்பன இவர்தம் உயிர்நாடிகள் எனலாம்; இவர் நாட்டுப் பற்று, மொழிப் பற்று, ஒற்றுமை உணர்ச்சி, தெய்வ வழிபாடு ஆகியவற்றைப்பற்றி நூற்றுக் கணக்கான பாடல்கள் பாடியுள்ளார். அவை பாரதியார் பாடல்கள் என்ற தலைப்பில் வெளியிடப்பட்டுள்ளன. காலம்: 1882 முதல் 1921 வரை ஆகும்.

## அருஞ்சொல் விளக்கம்

1. விண் - ஆகாயம்; வீரை - வீரம் உடையவளே! (சக்தியின் பெயர்களுள் ஒன்று); கசிந்து - இளகி; சிந்தனை - எண்ணம்; அகிலம் - உலகம் முழுமையும்.

2. உழன்று - வருந்தி; நரை - வெண்மயிர்; கூற்று - இயமன்; மாயும் - இறக்கும்; வேடிக்கை மனிதர் - பயனற்ற மக்கள்.

3. சோர்வு - தளர்ச்சி; பிணி - நோய்; கட்டு - உடலமைப்பு; உறுதி - வன்மை; சுடர்நாள் - ஒளிபொருந்திய சூரியன்; நண்ணி - பொருந்தி; மதவேள் - மன்மதன்.

4. பெருநிதியம் - மிக்க செல்வம்; சுவை - இனிமை; அழுந்தல் - பதிதல்; பண் - இராகம்; திறன் - வல்லமை.

## வினுக்கள்

1. பாரதியார் எவற்றை வெறும் பாலைவனத்திலிட்ட நீர் எனக் குறிக்கின்ருர்? ஏன்?

2. எத்தகையவர் வேடிக்கை மனிதர் என்று ஆசிரியர் குறிப்பிடு கின்ருர்?

3. தமக்கு உடற் கட்டு எவ்வாறு அமைதல் வேண்டுமெனப் பாரதி யார் வேண்டுகிருர்?

4. பாரதியார் இறைவியிடம் வேண்டுவன யாவை?

## பயிற்சி

I. பிரித்து எழுதுக :—தனியாளும், நினதருள், சிறுகதை, பாலை வனத்திலிட்ட, உடற்சோர்வு, பெருநிதியம்.

II. சேர்த்தெழுதுக :—சிந்தனை + ஒன்று ; கொடுமை + கூற்று ; கூற்றுக்கு + இரை ; உளத்து + அழுந்தல் ; திறன் + அடைதல்.

III. நினைவிற் கொள்க :—

1. கசிந்து கசிந்து கசிந்து—இங்குக் கசிந்து என்னும் சொல் மூன்று முறை வந்துளது. இத்தொடருக்கு மிகவும் இளகி என்பது பொரு ளாம். இங்ஙனம் ஒரே சொல் மீண்டும் மீண்டும் வரும் தொடருக்கு **அடுக்குத் தொடர்** என்பது பெயர். இங்கு இத்தொடர் மிகுதி என்னும் பொருளில் வந்தது. இதுபோன்றே விரைவு, அச்சம், இரக்கம் ஆகிய பொருள்களிலும் சொற்கள் அடுக்கிவரும். பாம்பு பாம்பு, நட நட, தின்று தின்று—இவை ஒவ்வொன்றும் எப்பொருளில் வந்தன?

2. மாரு உடலுறுதி—இங்கு மாருத என்னும் சொல் கடைசி எழுத் தாகிய 'த' கெட்டு வந்தது. இச்சொல் இல்லை என்னும் (எதிர்மறை) பொருளில் வந்த பெயரெச்சமாகும். எனவே இஃது **ஈறுகெட்ட எதிர் மறைப் பெயரெச்சம்** எனப்படும்.

3. நன்ரு உளத்து—இங்கு நன்ருக என்னும் சொல்லின் கடைசி எழுத்து மறைந்து வந்தது. இவ்வாறு சொல்லில் எழுத்து மறைந்து வருவது **தொகுத்தல் விகாரம்** எனப்படும்.

IV. இப்பகுதியில் வந்துள்ள பெயரெச்சம், வினையெச்சம் ஒவ் வொன்றுக்கும் நான்கு உதாரணங்கள் எழுதுக.

# II. வருணனை



## 1. மருதநில வனப்பு

தண்டலை மயில்க ளாடத்
　　தாமரை விளக்கம் தாங்கக்
கொண்டல்கள் முழவின் ஏங்கக்
　　குவளைகண் விழித்து நோக்கத்
தெண்டிரை எழினி தூக்கத்
　　தேம்பிழி மகர யாழின்
வண்டுகள் இனிது பாட
　　மருதம்வீற் றிருக்கு மாதோ.

—கம்பர்

## 2. ஐயாற்றின் வளம்

புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
அறிவழிந்திட் டைம்மே லுந்தி
அலமந்த போதாக அஞ்சேலென்(று)
அருள்செய்வான் அமரும் கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட
முழவதிர மழையென் றஞ்சிச்
சிலமந்தி யலமந்து மரமேறி
முகில்பார்க்கும் திருவை யாறே.

—திருஞானசம்பந்தர்

## 3. மலை வளம்

முழங்குதிரைப் புனலருவி கழங்கெனமுத் தாடும்
முற்றமெங்கும் பரந்துபெண்கள் சிற்றிலைக்கொண் டோடும்
கிழங்குகிள்ளித் தேனெடுத்து வளம்பாடி நடிப்போம்
கிம்புரியின் கொம்பொடித்து வெம்புதினை யிடிப்போம்
செழுங்குரங்கு தேமாவின் பழங்களைப்பந் தடிக்கும்
தேனலர்சம் பகவாசம் வானுலகில் வெடிக்கும்
வழங்குகொடை மகராசர் குறும்பலவி லீசர்
வளம்பெருகுந் திரிகூட மலையெங்கள் மலையே.

—திரிகூட இராசப்பக் கவிராயர்

## 4. நாட்டு வளம்

சூழ மேதி யிறங்குந் துறையில்
சொரியும் பாலைப் பருகிய வாளை
கூழை வாசப் பலாவினிற் பாயக்
கொழும்ப லாக்கனி வாழையிற் சாய
வாழை சாய்ந்தொரு தாழையிற் றூக்க
வருவி ருந்துக் குபசரிப் பார்போல்
தாழை சோறிட வாழை குருத்திடும்
சந்த்ர சூடர்தென் னூரிய நாடே.

—திரிகூட இராசப்பக் கவிராயர்

## 5. தென்றல்

பொங்கரின் நுழைந்து வாவி
புகுந்துபங் கயம்து ழாவிப்
பைங்கடி மயிலை முல்லை
மல்லிகைப் பந்தர் தாவிக்
கொங்கலர் மணங்கூட் டுண்டு
குளிர்ந்து மெல்லென்று தென்றல்
அங்கங்கே கலைகள் தேரும்
அறிவன்போல் இயங்கும் அன்றே.

—பரஞ்சோதி முனிவர்

### ஆசிரியர் குறிப்புக்கள்

1. **கம்பர்:** இவர் சோழநாட்டில் திருவழுந்தூரில் பிறந்தவர்; திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளலால் ஆதரிக்கப் பெற்றவர்; தமிழில் இராமாயணம் பாடியவர். காலம்: கி. பி. 12-ஆம் நூற்றுண்டு.

2. **திருஞானசம்பந்தர்:** இவர் சோழநாட்டில் சீர்காழி என்னும் ஊரில் பிறந்தவர்; சைவ சமயாசாரியர் நால்வருள் ஒருவர். இனிய இசையோடு கூடிய தேவாரப் பாடல்களைப் பாடியவர். காலம்: கி. பி. ஏழாம் நூற்றுண்டு.

3. **திரிகூட ராசப்பக் கவிராயர்:** இவர் குற்றுலக் குறவஞ்சி என்னும் நூலைப் பாடியவர்; திருக்குற்றுலத்தினருகில் மேலகரம் என்னும் ஊரில் வாழ்ந்தார்; குற்றுலத்தின் பெருமையைப்பற்றிப் பல நூல்கள் பாடியுள்ளார். காலம்: 18-ஆம் நூற்றுண்டு.

6. **பரஞ்சோதி முனிவர்:** இவர் திருமறைக்காடு என்னும் வேதாரணியத்தில் பிறந்தவர்; திருவிளையாடற் புராணம் பாடியவர்; சைவ சித்தாந்த உணர்ச்சி மிக்கவர். காலம்: 16-ஆம் நூற்றுண்டின் பிற்பகுதி.

### அருஞ்சொல் விளக்கம்

1. மருதநிலம் - வயலும் வயல் சார்ந்த இடமும்; தண்டலை - சோலை; கொண்டல் - மேகம்; முழவு - மத்தளம்; ஏங்க - ஒலிக்க; குவளை - ஆம்பல்மலர்; திரை - அலை; எழினி - திரைச்சீலை; தேம்பிழி - இனிய இசையைப் பொழிகின்ற; மகர யாழ் - மீன் உருவமாக அமையப் பெற்ற யாழ்வகை.

2. புலன் ஐந்து - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன; பொறி - மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து இந்திரியங்கள்;

ஐ - கோழை ; உந்தி - தள்ளி ; அலமந்தபோது - உயிர் சுழல்கின்ற சமயம் ; முழவு - மத்தளம் ; மந்தி - பெண் குரங்கு ; முகில் - மேகம் ; திருவையாறு - திரு + ஐந்து + ஆறு : காவிரியின் பிரிவாகிய ஐந்து ஆறுகள் ஓடும் இடத்தில் அமைந்த ஒரு சிவத்தலம்.

3. முழங்கு - ஒலிக்கின்ற ; புனல் - நீர் ; கழங்கு - பெண்கள் விளையாடுவதற்குப் பயன்படும் கழற்சிக்காய் ; சிற்றில் : சிறுமை + இல் - சிறிய வீடு ; கிம்புரி - பூண் கட்டப்பெற்ற ; கொம்பு - யானைத் தந்தம் ; வெம்பு - காய்ந்த ; தேமா - தேன் மாமரம் ; வாசம் - மணம் ; வெடிக்கும் - மிகவும் பரவும் ; பலவில் ஈசர் - பலாமரத்தடியில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் ; திரிகூடமலை - குற்றாலமலை.

4. மேதி - எருமை ; வாளை - ஒருவகை மீன் ; கூழை-குட்டையான ; தாழை - தாழஞ்செடி ; சோறு - மகரந்தத் தூளாகிய சோறு ; குருத்து - குருத்திலை ; சந்த்ரசூடர் - சந்திரனைத் தலையில் அணிந்த சிவபெருமான்.

5. பொங்கர் - சோலை ; வாவி - தடாகம் ; பங்கயம் - தாமரை ; பைங்கடி மயிலை - பசுமையும் மணமும் கொண்ட இருவாட்சி மலர் ; கொங்கு - தேன் ; தேரும் - ஆராய்ந்து அறிகின்ற ; இயங்கும் - செல்லும்.

## வினாக்கள்

1. கம்பர் கூறும் மருதநிலச் சிறப்பை எழுதுக.
2. சிவபெருமான் எப்பொழுது மக்கட்கு 'அஞ்சேல்' என்று அருள் புரிவார் ?
3. திருவையாறு எங்ஙனம் ஞானசம்பந்தரால் புகழப்பெற்றுள்ளது?
4. திரிகூடமலையின் வளத்தை வருணிக்க.
5. தென்னாரியநாடு விருந்தினரை எங்ஙனம் உபசரிக்கிறது என ஆசிரியர் குறிக்கின்றார் ?
6. கலைகள் தேரும் அறிவன்போல் இயங்குவது யாது? எங்ஙனம்?

## பயிற்சி

I. பிரித்து எழுதுக :—தாழையிற்றுக்க, தென்னாரியநாடு, பைங்கடி, திருவையாறு, தெண்டிரை, செழுங்குரங்கு, கழங்கென, சோறிட.

II. சேர்த்தெழுதுக :—முழவு + அதிர, சிறுமை + இல், வாசம் + பலா, கொங்கு + அலர், அறிவு + அழிந்து, புனல் + அருவி.

III. நினைவிற் கொள்க :—

அருள் செய்வான் அமரும் கோயில்

வருவிருந்துக்கு உபசரிப்பார் போல்.

இத்தொடர்களில் உள்ள செய்வான், உபசரிப்பார் என்ற சொற்களைக் கவனிக்க. இவை அருள் செய்யும் ஈசனையும், உபசரிப்பவரையும் குறிக்கின்றன. இவை செய்தல், உபசரித்தல் ஆகிய வினைகளைமட்டும் குறிக்காமல் அவ்வினைகளையுடைய பெயர்களைக் குறித்தன. எனவே இவை **வினையாலணையும் பெயர்களாம்.**

# III. அறவுரை

## 1. பழமொழி நானூறு

### குலவித்தை கல்லாமலே வரும்

உரைமுடிவு காணுன் இளமையோ னென்ற
நரைமுது மக்கள் உவப்ப—நரைமுடித்துச்
சொல்லால் முறைசெய்தான் சோழன் குலவிச்சை
கல்லாமல் பாகம் படும். (1)

### கற்றவர் பெருமையைக் கற்றவரே அறிவர்

புலமிக் கவரைப் புலமை தெரிதல்
புலமிக் கவர்க்கே புலனும்—நலமிக்க
பூம்புனல் ஊர! பொதுமக்கட் காகாதே
பாம்பறியும் பாம்பின கால். (2)

### அறிவிலார் இழிவு

ஆயிரவ ரானும் அறிவிலார் தொக்கக்கால்
மாயிரு ஞாலத்து மாண்பொருவன் போல்கலார்
பாயிருள் நீக்கும் மதியம்போல் பல்மீனும்
காய்கலா ஆகும் நிலா. (3)

### வறுமையிற் செம்மை

நாடறியப் பட்ட பெருஞ்செல்வர் நல்கூர்ந்து
வாடிய காலத்தும் வட்குபவோ ?—வாடி
வலித்துத் திரங்கிக் கிடந்தே விடினும்
புலித்தலையை நாய்மோத்தல் இல். (4)

### நன்றி மறவேல்

நாடி நமரென்று நன்கு புரந்தாரைக்
கேடு பிறரோடு சூழ்தல் கிளர்மணி
நீடுகல் வெற்ப! நினைப்பின்றித் தாமிருந்த
கோடு குறைத்து விடல். (5)

### பேதையின் இயல்பு

பொல்லாத சொல்லி மறைந்தொழுகும் பேதைதன்
சொல்லாலே தன்னைத் துயர்ப்படுக்கும்—நல்லாய்!
மணலுள் முழுகி மறைந்து கிடக்கும்
நுணலுந்தன் வாயாற் கெடும். (6)

—முன்றுறையரையனர்

### ஆசிரியர் குறிப்பு

**முன்றுறையரையனர் :** இவர் முன்றுறை என்ற ஊரில் இருந்து ஆண்ட அரசராக இருக்கலாம் என்பது இப்பெயரிலிருந்து அறியப்படுகிறது. ஒவ்வொரு செய்யுளிலும் ஒரு பழமொழி அமையுமாறு பாடிய நானூறு பாடல்களைக் கொண்ட நூலாதலின் இந்நூல் பழமொழி என்று பெயர் பெற்றது. காலம் : கி. பி. இரண்டாம் நூற்றுண்டு.

### அருஞ்சொல் விளக்கம்

1. உரை முடிவு - பிறர் கூறும் வழக்கின் முடிவு ; முறை செய்தான்-நீதி வழங்கினுன் ; சோழன் - கரிகால்வளவன் ; குலவிச்சை - குலத்திற்கு உரிய கல்வி ; பாகம் படும் - பக்குவப்படும், தானகவே வந்து சேரும்.

2. புலம் - அறிவு ; தெரிதல் - ஆராய்ந்தறிதல் ; புலனும் - அறியப்படும் ; புனல் - நீர்.

3. தொக்கக்கால் - கூடியிருந்தால் ; மாயிருஞாலம் - மிகப் பெரிய உலகம் ; பாயிருள் - பரந்த இருள் ; மதியம் - சந்திரன் ; மீன் - நட்சத்திரம்.

4. நல்கூர்ந்து - வறுமை யடைந்து ; வட்குபவோ - தம் இயல்பில் தளர்வரோ ? (தளரார்) ; வலித்து - துன்புற்று ; திரங்கி - தோல் சுருங்கி ; மோத்தல் - முகர்தல்.

5. நமர் - நம்மைச் சேர்ந்தவர் ; புரந்தார் - காப்பாற்றியவர் ; கிளர் - ஒளி வீசுகின்ற ; நீடு கல் வெற்ப - நீண்ட கற்கள் நிறைந்த மலைநாட்டரசனே ! கோடு - கிளை ; குறைத்து விடல் - வெட்டி விடுவது போலாகும்.

6. பேதை - அறிவற்றவன் ; நல்லாய் - நற்குண முடையவளே ; நுணல் - தவளை.

### வினக்கள்

1. சொல்லால் முறை செய்தவன் யார் ? எங்ஙனம் முறை செய்தான் ? அதனல் அறியப்படுவது யாது ?

2. பாம்பறியும் பாம்பினகால்—இதன் கருத்தை விளக்குக.

3. அறிவில்லார் பலர் சேர்ந்தும் அறிவுடைய ஒருவருக்கு ஈடாக மாட்டார் என்பது எதனுல் விளக்கப்படுகிறது ?

4. சான்றேர் வறுமையினும் செம்மையாக வாழ்பவர்—எங்ஙனம் ?

5. எச்செயல் தாம் இருந்த கோடு குறைத்துவிடலுக்கு ஒப்பாகும் ?

6. பேதை தன் சொல்லாலே தன்னைத் துயர்ப்படுக்கும்-எங்ஙனம் ? உதாரணம் தருக.

## பயிற்சி

I. பிரித்து எழுதுக :—புலமிக்க, பாம்பறியும், பெருஞ்செல்வர், வாயாற்கெடும், முதுமக்கள், மாண்பொருவன்.

II. சேர்த்தெழுதுக :—பூ+புனல் ; நலம்+மிக்கவர் ; நாடு+அறிய ; நமர்+என்று ; மறைந்து+ஒழுகும்.

III. கீழ்க்கண்ட பெயர்ச் சொற்கள் எவ்வேற்றுமையில் வந்தன :—

சொல்லால், ஊர, பாம்பின், தலையை, பிறரோடு, மணலுள், வெற்ப, வாயால், பாம்பு.

IV. இப்பகுதியிலுள்ள வினையாலணையும் பெயர், தொழிற் பெயர் ஆகியவற்றிற்கு நான்கு உதாரணங்கள் தருக.

V. நினைவிற் கொள்க :—

1. முறை செய்தான், புலித்தலை.

இத்தொடர்கள் முறையைச் செய்தான் என்றும் புலியினது தலை எனவும் பொருள்படும்.

இவற்றுள் ஐ, அது என்னும் வேற்றுமை உருபுகள் மறைந்து (தொக்கி) வந்தமையால் இவை வேற்றுமைத் தொகைகளாம்.

முறை செய்தான் என்னும் தொடரில் 'ஐ' என்னும் இரண்டாம் வேற்றுமை உருபு மறைந்துள்ளது (தொக்கி நின்றது). ஆதலால் இத் தொடர் இரண்டாம் வேற்றுமைத் தொகை எனப்படும்.

புலித்தலை என்னும் தொடரில் அது என்னும் வேற்றுமை உருபு மறைந்து வந்தமையால் இத்தொடர் ஆரும் வேற்றுமைத் தொகை எனப்படும். இவ்வாறே தொடர்களில் எவ்வேற்றுமை உருபு மறைந்துள்ளதோ அவ்வேற்றுமைத்தொகை என வழங்குவர்.

2. தனது கை, தன கைகள்.

அது — ஆரும் வேற்றுமை உருபு — ஒருமை எண்.

அ — ,, ,, — பன்மை எண்.

## 2. பன்னூல் திரட்டு

### ஈகைச் சிறப்பு

முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
எல்லைநீர் ஞாலத் திசைவிளங்கத்—தொல்லை
இரவாமல் ஈந்த இறைவர்போல் நீயும்
கரவாமை ஈதல் கடன். (1)

—புறப் பொருள் வெண்பாமாலை

### செல்வத்துப் பயனே ஈதல்

பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லை; பிறந்துமண்மேல்
இறக்கும் பொழுது கொடுபோவ தில்லை; இடைநடுவிற்
குறிக்குமிச் செல்வம் சிவன்தந்த தென்று கொடுக்கறியா(து)
இறக்குங் குலாமருக் கென்சொல்லு வேன்கச்சி யேகம்பனே. (2)

—பட்டினத்தார் பாடல்

### பொய்யுரைத்தலின் இழிவு

இம்மை நலனழிக்கும் எச்சம் குறைபடுக்கும்
அம்மை அருநரகத் தாழ்விக்கும் மெய்ம்மை
அறந்தேயும் பின்னு மலர்மகளை நீக்கும்
மறந்தேயும் பொய்யுரைக்கும் வாய். (3)

—சிறுபஞ்சமூலம்

### நரகத்தை அடைவிக்கும் தீமைகள்

அரவமல்கிய பதாகை யாய்! மதி
யமைச்ச ராயர சழிப்பினும்
குரவர் நல்லுரை மறுக்கி னும்பிறர்
புரிந்த நன்றியது கொல்லினும்
ஒருவர் வாழ்மனையி லுண்டு பின்னுமவ
ருடன ழன்றுபொர வுன்னினும்
இரவி யுள்ளளவு மதிய முள்ளளவு
மிவர்க ளேநரகி லெய்துவார். (4)

—வில்லிபாரதம்

### கல்வியின் சிறப்பு

உற்றுழி யுதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே;
பிறப்போ ரன்ன உடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயுமனம் திரியும்;
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக என்னாது அவருள்
அறிவுடை யோனா(று) அரசும் செல்லும்;
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனும் அவன்கண் படுமே. (5)

—புறநானூறு

### புகழுடலின் பெருமை

ஒருவன திரண்டி யாக்கை ஊன்பெய்து நரம்பு போர்த்த
உருவமும் புகழும் என்றாங்(கு) அவற்றினுள் ஊழின்வந்து
மருவிய யாக்கை ஈங்கே மாய்ந்துபோம் மற்றை யாக்கை
திருவமர்ந் துலக மேத்தச் சிறந்துபின் னிற்கு மன்றே. (6)

—சூளாமணி

## ஆசிரியர் குறிப்பு

**பன்னூல் திரட்டு:** பல நூல்களில் பாடப்பெற்ற நீதியும் சுவையும் மிக்க பாடல்கள் அடங்கிய தொகுதி என்பது இதன் பொருளாம். இதனைத் தொகுத்தவர் **பாண்டித்துரைத் தேவராவர்.** இவர் தமிழில் பேரார்வ முடையவர்; தமிழில் பல நூல்களை வெளியிடுவதற்கு ஊக்கமளித்தவர்.

**புறப்பொருள் வெண்பாமாலை:** இந்நூல் புறப் பொருளைப் பற்றிய வெண்பாக்களைக் கொண்ட மிகப்பழமையான நூலாகும். இந்நூலில் போரைப்பற்றிய இலக்கணங்கள் திணை, துறை என வகுத்துக் கூறப்பட்டுள்ளன. இதன் ஆசிரியர் **ஐயனாரிதனார்.**

**பட்டினத்தார் பாடல்:** இதன் ஆசிரியர் **பட்டினத்தார்.** இவர் காவிரிப்பூம்பட்டினத்தில் வணிகர் மரபில் தோன்றிய பெருஞ் செல்வர். **திருவெண்காடர்** என்பது இவருடைய இயற் பெயராம். இவர் இறைவ

னிடத்தில் பக்திகொண்டு துறவு பூண்டு பல தலங்களுக்கும் சென்று இறைவனைப் பற்றிப் பல சிறந்த பாடல்களை உள்ளமுருகப் பாடியுள்ளார். இறுதியில் திருவொற்றியூரில் சமாதிநிலை அடைந்தார். காலம் : பத்தாம் நூற்றாண்டு.

**சிறு பஞ்ச மூலம் :** சிறுவழுதுணை, பெருவழுதுணை, கண்டங் கத்தரி, நெருஞ்சி, சிறு மல்லி ஆகிய வேர்களாலாகிய மருந்துக்குச் சிறு பஞ்சமூலம் என்பது பெயர். இம்மருந்து உடல் நோயைப் போக்கு வதுபோல் இந்நூலிலுள்ள பாடல்கள் அறியாமையாம் மனநோயைப் போக்குவதால் இப்பெயர் பெற்றது. இது பதினெண் கீழ்க்கணக்கு நூல் களில் ஒன்று. இதன் ஆசிரியர் காரியாசான். இவர் சமண மதத்தைச் சார்ந்தவர். காலம் : கி. பி. இரண்டாம் நூற்றாண்டு என்பர்.

**வில்லி பாரதம் :** இந் நூல் வில்லிபுத்தூரார் என்பவரால் இயற் றப்பெற்றது. வில்லிபுத்தூரார் திருமுனைப்பாடி நாட்டில் சனியூரில் பிறந்தார் ; வக்கபாகை வரபதியாட் கொண்டானால் ஆதரிக்கப்பெற்றார். பெரியாழ்வாரிடம் பக்தி கொண்ட காரணத்தால் இவருக்கு இப்பெயர் வழங்கலாயிற்று.

**புறநானூறு :** கடைச் சங்க காலத்தில் தோன்றிய எட்டுத் தொகை நூல்களில் ஒன்று. இதில் பற்பல புலவர் பல காலங்களில் பாடிய நானூறு பாடல்கள் உள்ளன. இப்பாடலைப் பாடியவர் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்னும் பாண்டிய மன்னராவார்.

**சூளாமணி :** இஃது ஐஞ்சிறு காப்பியங்களில் ஒன்று. இதன் ஆசிரியர் தோலா மொழித் தேவர்.

## அருஞ்சொல் விளக்கம்

1. ஞாலம் - பூமி ; இசை - புகழ் ; தொல்லை - முற்காலத்தில் ; இறை வர் - முறையே பாரி, பேகன் ஆகிய வள்ளல்கள் ; கரவாமை-ஒளிக்காமல்.

2. குறிக்கும் - பெரிதென மதிக்கும் ; கொடுக்கறியா(து)-கொடுக்க + அறியாது; குலாமர் - உலோபிகள் ; கச்சி-காஞ்சிபுரம் ; ஏகம்பன் - காஞ்சி புரத்தில் கோயில் கொண்டருளிய இறைவன் திருப்பெயர்.

3. எச்சம் - புகழ், மக்கள் ; அம்மை - மறுமை ; அலர் மகள் - திரு மகள், செல்வம்.

4. அரவம்-பாம்பு ; மல்கிய-பொருந்திய ; பதாகை - கொடி ; மதி - அறிவு ; குரவர் - ஆசிரியர் ; அழன்று - கோபித்து; பொர - போர் செய்ய ; உன்னினும் - நினைத்தாலும் ; இரவி - சூரியன் ; மதியம் - சந்திரன்.

5. உற்றுழி - துன்பம் நேர்ந்தபோது; உறுபொருள் - மிக்க செல்வம்; பிற்றை நிலை - வழிபடுதல்; முனியாது - வெறுப்புக்கொள்ளாமல்; திரியும் - மாறு படுவாள்; ஆறு - வழி; அரசும் செல்லும் - அரசனும் நடப்பான்; நாற்பால் - நான்கு சாதிகள்; அவன்கண் படும் - அவனிடத்தில் செல்வான்.

6. இரண்டு யாக்கை - இரு உடல்கள்: பூத உடல், புகழுடல்; ஊன் - மாமிசம்; ஊழ் - முற்பிறவியில் செய்த நன்மை தீமைகள்; மருவிய- பொருந்திய; திரு - மேன்மை; ஏத்த - போற்ற.

## பயிற்சி

I. பிரித்து எழுதுக :—ஞாலத்திசை, நலனழிக்கும், அருநரகம், மதியமைச்சர், நல்லுரை, மதியமுள்ளளவும், மேற்பால், நரகத்தாழ் விக்கும்.

II. சேர்த்தெழுதுக :—அறம் + தேயும்; பொய் + உரைக்கும்; பொர + உன்னினும்; நான்கு + பால்; இரண்டு + யாக்கை; திரு + அமர்ந்து; பின் + நிற்கும்.

III. நினைவிற் கொள்க :—

1. கொடு வந்தது, கொடு போவது - இங்குக் கொண்டு என்னும் சொல்லின் ண் என்னும் எழுத்து மறைந்து வந்தது; இது **தொகுத்தல் விகாரமாம்.**

உற்றுழி - உற்ற + உழி: அகரம் தொக்கு வந்தது தொகுத்தல் விகாரம்.

2. இரண்டு + யாக்கை - இரண்டியாக்கை: இரண்டு என்னும் சொல்லில் உள்ள குற்றியலுகரத்தின் முன் யா என்னும் எழுத்து வந்தமையால் உகரம் இகரமாய்த் திரிந்தது. இது **குற்றியலிகரம்** எனப் படும்.

# IV. கதை

## 1. அரிச்சந்திர புராணம்

[சந்திரமதி தன் கணவன் பணித்தபடி தன்னை அடிமையாகக் கொண்ட அந்தணரிடம் சென்று கால் பணமும் முழத்துண்டும் பெற்றுவரும் வழியில் விசுவாமித்திரருடைய மாயையால் இறந்து கிடந்த காசி ராஜன் மகனைக் கொன்றதாகக் கொலைக் குற்றம் சாட்டப்பட்டாள். அவளுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. அவளை வெட்டும் பொறுப்பு அரிச்சந்திரனிடம் ஒப்புவிக்கப்பட்டது.]

### அரிச்சந்திரன் சந்திரமதியை அழைத்து ஏகுதல்

"என்ன பாதகம் செய்தனம்," எனஇறை நகைத்துக்
கன்னி கைகளைக் கட்டிய கயிறுதான் பிடித்துத்
துன்னு மாமணித் தோரண வாயிலைக் கடந்து
பொன்னின் மாநகர்ப் புரிசையின் புறத்துவந் திறுத்தான்.
(1)

### கௌசிகன் கூறிய மொழி

அந்த வேளையில் கௌசிகன் விரைந்துவந் "தரசே!
இந்த நோதக(வு) எய்தலென்? எனக்குநீ முன்னம்
தந்த நாடியான் தந்திலேன் எனுமொழி சாற்றி
உந்தம் நாடுமிவ் வுயிர்களும் பெறுகென," உரைத்தான்.
(2)

### அரிச்சந்திரனும் சந்திரமதியும் மறுத்துரைத்தல்

சேர நின்றவன் செப்பிய தாங்கவர் அன்றி
யாரும் கேட்டிலர்; வசிட்டனும் அமரரும் அறிந்தார்;
வீர வேந்தனும் மங்கையும் அவனடி வீழ்ந்திங்(கு),
"யாரை நீஇந்த ஏழைமைக் காட்செய்தி?" என்றார். (3)

வாய்மையின் சிறப்பு

“சேய்மை அண்மையின் உயிர்க்கொரு துணையெனச் சிறந்த
வாய்மை யாலகம் தூய்மையாம்; மற்றிலே; புறத்தைத்
தூய்மை செய்வது நீரலாற் சொல்லின்வே றுளதோ?
நோய்மை செய்யினும் வாய்மையே நோன்பெமக் கறிதி.” (4)

கௌசிகன் நாணி மறைதல்

“பதியி ழந்தனம் பாலனை இழந்தனம் படைத்த
நிதியி ழந்தனம் இனிநமக் குளதென நினைக்கும்
கதியி ழக்கினும் கட்டுரை இழக்கிலேம்,” என்றார்;
மதியி ழந்துதன் வாயிழந் தருந்தவன் மறைந்தான். (5)

சந்திரமதியின் அறவுரை

“வழக்கின் என்றுநீ வழிபடு தெய்வத்தை வணங்கிக்
கிழக்கு நோக்கிஈண் டிரு,” வெனக் கிளிமொழி மடந்தை
பழக்க மானஅக் கணவனைப் பரவி, “என் ஆவி
இழக்கற் கஞ்சிநீ அறம்வழு வேல்,” என இயம்பும். (6)

அரிச்சந்திரன் கடைப்பிடித்த அறம்

“உலகு யிர்க்கெலாம் பசுபதி ஒருமுதல் ஆயின்;
அலகில் சீருடை அவன்மொழி மறைஎனின்; அதன்கண்
இலக றம்பல வற்றினும் வாய்மைஈ டிலதேல்
விலகு ருமலவ் வாய்மையை விரதமாக் கொளின்யான்.” (7)

வாள் வீச அது மாலையாய் வீழ்தல்

“நெறியின் அன்னஎன் றனைவிடா நிறைஇவட் குளதேல்
இறுதி இன்மையைப் பெறுக; இல் லெனிலிவள் இறுதி
பெறுக,” என்றுவாள் வீசினன்; பேதைதன் கழுத்தில்
மறும ணத்திடு மாலையாய் வீழ்ந்ததவ் வடிவாள். (8)

—நல்லூர் வீரன் ஆசுகவிராயர்

## ஆசிரியர் குறிப்பு

நல்லூர் வீரன் ஆசுகவிராயர் : இவர் 400 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர் ; பொற்கொல்லர் மரபைச் சார்ந்தவர். நல்லூர் என்பது பாண்டிய நாட்டில் உள்ள ஓர் ஊர் ஆகும்.

## அருஞ்சொல் விளக்கம்

1. இறை - அரசன் ; துன்னு - நெருங்கிய ; தோரண வாயில் - தோரணங்கள் கட்டப்பட்ட வாயில் ; புரிசை - மதில் ; இறுத்தான் - தங்கினன்.

2. நோதகவு - துன்பம் ; எய்தல் - அடைதல் ; பெறுகென - பெறுக +என.

3. வசிட்டன் - அரிச்சந்திரனின் குலகுரு ; அமரர் - தேவர் ; ஏழைமை - அறியாமை ; ஆட்செய்தி - ஆளாக்குகின்றாய்.

4. சேய்மை - மறுமை ; அண்மை - இம்மை ; அகம்-மனம் ; புறம் - உடல் ; நோய்மை - துன்பம்.

5. பதி - நாடு ; நிதி - செல்வம் ; கதி - வீடு பேறு ; கட்டுரை - வாய்மை ; வாய் இழந்து - பேச வழி இன்றி.

6. என்று நீ - என்றும் + நீ ; கிளிமொழி - கிளி போன்ற சொல் ; மடந்தை - பெண் (சந்திரமதி) ; பரவி - வணங்கி ; ஆவி - உயிர் ; வழுவேல் - தவறாதீர்.

7. பசுபதி - சிவபெருமான் ; அலகு இல் - அளவில்லாத ; மறை - வேதம் ; இலகு - விளங்குகின்ற.

8. நிறை - கற்பு ; இறுதி - மரணம் ; பேதை - சந்திரமதி ; வடிவாள் - கூர்மையான வாள்.

## வினாக்கள்

1. அரிச்சந்திரன் சந்திரமதியைக் கொலைக்களத்திற்கு எங்ஙனம் அழைத்து வந்தான் ?

2. கௌசிகன் அரிச்சந்திரனிடம் உரைத்த மொழி யாது ?

3. வாய்மையின் சிறப்புக்கள் யாவை ?

4. அரிச்சந்திரனின் மனவுறுதியை விளக்குக.

5. 'என் ஆவி இழக்கற்கு அஞ்சி நீ அறம் வழுவேல்'—சந்தர்ப்பம் கூறுக.

6. சந்திரமதியின் கற்பு மாண்புக்கு ஓர் உதாரணம் தருக.

7. அரிச்சந்திரன் வாள் வீசுகையில் கூறிய உறுதி மொழிகள் யாவை?

## பயிற்சி

I. பிரித்து எழுதுக: எய்தலென், பெறுகென, ஆட்செய்தி, வேறுளதோ, ஈண்டிரு.

II. சேர்த்தெழுதுக:—ஈடு + இலதேல்; அவன் + அடி; மற்று + இலை; எனும் + மொழி; உயிர்க்கு + ஒரு.

III. இறுத்தான்-படர்க்கை ஆண்பால் வினைமுற்று; அறிந்தார் - பலர்பால் படர்க்கை வினைமுற்று; வீழ்ந்தது - படர்க்கை ஒன்றன்பால் வினைமுற்று; செய்தி - முன்னிலை ஒருமை வினைமுற்று; தந்திலேன் - தன்மை ஒருமை வினைமுற்று; இழக்கிலேம் - தன்மைப் பன்மை வினை முற்று. இவ்வாறே இப்பகுதியிலுள்ள மற்ற வினைமுற்றுக்கள் எவ் வகையைச் சார்ந்தன என்பதை அறிக.

IV. பெறுக—இவ்வினைமுற்று ஐம்பால் மூவிடங்களுக்கும் பொது வாக வரும். இது வியங்கோள் வினைமுற்று எனப்படும்.

V. சேய்மை—இச்சொல்லுக்கு எதிர்ப்பதம் அண்மை. இவ்வாறு கீழ் வருவனவற்றிற்கு எதிர்ப்பதம் தருக:

இம்மை, வாய்மை, இழந்தனம், மறைந்தான், அறம்.

## 2. குசேலோபாக்கியானம்



குசேலர் கண்ணபிரானைக் காணல்

எண்ணனைக் கிலங்கு மார்பம் ஈந்தருள் பிரானை நீல
வண்ணனைத் திகிரி சங்கம் வலமிட முறக் கொண் டானை
மண்ணனைத் தும்பு ரக்கும் வாசுதே வனைம ணக்கும்
கண்ணனை துளவத் தாமக் கண்ணனைக் கண்ணிற் கண்டான். 1

கண்ணபிரான் அன்பின் திறம்

காண்டலும் உவகை பூத்துக் கால்விசை கொடுந டந்தான் ;
ஆண்டகை யவனும் கண்ணுற் றணையுடைத் தெழுநீத் தம்போல்
நீண்டபூம் பள்ளி நீத்து நிலவுபே ரன்பு பொங்கப்
பூண்டமா தவன்முன் சென்று பொன்னடி வணங்கி னுனல். 2

வழிநடந் திளைத்த வேயிம் மலரடி யிரண்டு மென்று
கழிமகிழ் சிறப்ப மெல்ல வருடினுன் கமலக் கண்ணன் ;
பழியில்பல் லுபசா ரங்கள் பண்ணவும் தெரியா னுகி
ஒழிவறு தவக்கு சேலன் ஒன்றும்பே சாதி ருந்தான். 3

### குசேலரைப் புகழ்தல்

மன்னுடைய மறையனைத்தும் வகுத்துணர்ந்த மாதவனே
உன்னுடைய தரிசனத்தால் உடம்புபூ ரித்தனன்யான்
மின்னுடைய விளங்கொளிவேல் வேந்தருளும் தேவருளும்
என்னுடைய பெறலரும்பே றியார்பெற்றார் யார்பெறுவார்? 4

### பழைய நினைவு

இருவேமும் முன்னாளில் இலங்குசாந் தீபமுனி
வருகாமர் அடிவணங்கி மாமறைகற் றுணர்ந்திடுநாள்
பெருகார்வத் தொடும்பேசிக் கொண்டிருந்த பேச்செல்லாம்
திருகாரா உளத்துநினைத் திருக்கின்றா யோசிறப்ப ? 5

### கண்ணபிரான் 'என் கொண்டு வந்தனை' எனல்

பந்தனை அகன்ற மேலோய் பற்பல நாட்குப் பின்பு
வந்தனை; எனக்கென் கொண்டு வந்தனை ? அதனை இன்னே
தந்தனை யாயின் நன்று ; தருசுவை பக்க ணத்தென்
சிந்தனை நின்ற தென்றான் தெரிவரும் வஞ்சக் கள்வன். 6

### குசேலர் தயங்குதல்

"திருந்தஇங் களித்தி," என்று
செங்கரம் மலர்த்தி நீட்டப்
பொருந்தஇன் பாலுண் பான்பால்
புளித்தகா டியைக்கொ டுத்திட்டு
அருந்திடென் றுரைத்தல் போலிவ்
வவற்கொடை என்று வாளா
இருந்தனன் குசேல மேலோன் ;
இவனுளம் அறிந்த கண்ணன். 7

### கண்ணபிரான் அவல் உண்ணல்

மலிதரும் அன்பின்வந்த வண்பொதி அவிழ்த்து நோக்கி
வலிதரும் அவற்றுள் நன்கு வாய்த்தது நமக்கி தென்று
ஒலிதரு கழற்கால் ஐயன் ஒருபிடி அவலைக் காதல்
பொலிதர எடுத்து வாயில் போகட்டுக் கொண்டான் மாதோ. 8

—வல்லூர் தேவராசப் பிள்ளை

## ஆசிரியர் குறிப்பு

**வல்லூர் தேவராசப் பிள்ளை :** இவர் வல்லூரில் வாழ்ந்தவர் ; திரிசிரபுரம் மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் மாணுக்கர். இவர் இயற்றிய நூல் குசேலோபாக்கியானம். குசேல + உபாக்கியானம். குசேலரைப் பற்றிய கிளைக்கதை என்பது பொருள். இவர் காலம் 19-ஆம் நூற்ருண்டு.

## அருஞ்சொல் விளக்கம்

1. எண் - யாவராலும் நினைக்கப்படும் ; அனை - அன்னையாகிய இலக்குமி தேவிக்கு ; இலங்கும் - விளங்கும் ; ஈந்தருள்பிரானை - கொடுத்தருளிய பெருமானை ; திகிரி - சக்கரம் ; புரக்கும் - காக்கின்ற ; கண்ணனை : கள் + நனை - தேனினுல் நனைகின்ற ; துளவத்தாமம் - துளசி மாலை.

2. உவகை பூத்து - மகிழ்ச்சி கொண்டு ; ஆண்டகை : ஆண் + தகை - ஆண்களிற் சிறந்த கண்ணன் ; அணை - கரை ; நீத்தம் - வெள்ளம் ; பள்ளி - படுக்கை ; நிலவு - விளங்குகின்ற ; மாதவன் - குசேலன்.

3. கழி - மிகவும் ; வருடினுன் - தடவினுன், பிடித்தான் ; கமலம் - தாமரை ; குசேலன் - கிழிந்த ஆடையை அணிந்தவன்.

4. மன்னுடைய - நிலைபெற்ற; மறை - வேதம் ; தரிசனம் - காட்சி ; பூரித்தனன் - பருத்தனன் ; பெறல் அரும் - அடைவதற்கு அருமையான ; பேறு - சிறப்பு, பாக்கியம்.

5. காமர் - அழகு ; ஆர்வம் - விருப்பம் ; திருகுஆரா - மாறுபாடு இல்லாத.

6. பந்தனை - கட்டு, ஆசை ; பக்கணத்து - பட்சணத்தில், சிற்றுண்டியில் ; சிந்தனை - எண்ணம்.

7. திருந்த - திருத்தமாக; அளித்தி - கொடு; கரம் - கை; மலர்த்தி - விரித்து; காடி - புளித்தநீர் ; அருந்திடு - பருகு ; கொடை - கொடுத்தல்; வாளா - மௌனமாக ; உளம் - எண்ணம்

8. மலிதரும் - மிகுந்த ; வண்பொதி - சிறந்த முடிப்பு ; காதல் பொலிதர - விருப்பம் மிக; மாதோ - அசை.

## வினாக்கள்

1. கண்ணபிரானின் பெருமைகளை ஆசிரியர் எங்ஙனம் விளக்குகின்றார்?

2. அணையுடைத் தெழு நீத்தம்போல்—இடம் சுட்டி விளக்குக.

3. கண்ணபிரான் குசேலரை எங்ஙனம் உபசரித்தார்?

4. என்னுடைய பெறலரும் பேறு யார் பெற்றார்?—இங்ஙனம் கூறக் காரணம் என்ன?

5. சாந்தீப முனிவர் யார்? சிறு குறிப்பு எழுதுக.

6. தெரிவரும் வஞ்சக் கள்வன் யாவன்? இங்ஙனம் கூறச் காரணம் என்ன?

7. குசேலர் அவல் கொணர்ந்திருந்தும் கொடுக்கத் தயங்கியது ஏன்?

8. கண்ணபிரான் அவல் உண்ணும்போது கூறியவற்றை எழுதுக.

## பயிற்சி

I. பிரித்து எழுதுக:—எண்ணனைக்கு, ஆண்டகை, முன்னாள், பற்பல, செங்கரம், அவற்கொடை.

II. சேர்த்தெழுதுக:—கள் + நனை, பூ + பள்ளி, பெருமை + அன்பு, பொன் + அடி, பேறு + யார், வண்மை + பொதி, ஒழிவு + அறு.

III. இன்னதொகை எனக் கூறுக:—திகிரிசங்கம், பொன்னடி, இலங்குமார்பம், செங்கரம், அவற்கொடை.

IV. நினைவிற் கொள்க:—

1. யார் பெற்றார்: யார் என்னும் எழுவாயைத் தொடர்ந்து பெற்றார் என்னும் சொல் வந்துள்ளமையால் எழுவாய்த் தொடர் எனப்படும்?

2. மாதவனே! உன்னுடைய: விளித்தொடர். மாதவனே என்பது விளியாகும்.

3. புரக்கும் வாசுதேவன்: பெயரெச்சத் தொடர்.

4. வகுத்து உணர்ந்த: வினையெச்சத்தொடர்.

5. பூரித்தனன் யான்: வினைமுற்றுத்தொடர்.

6. போல் இவ் வவற் கொடை: இடைச் சொற்றொடர்.

7. கழி மகிழ்: உரிச்சொற்றொடர்.

8. கசிந்து கசிந்து: அடுக்குத் தொடர். ஒரு சொல்லே அடுக்கி வந்தது.

இவை தொகாநிலைத் தொடர்களாம்.

# V. முப்பெரும் இலக்கியங்கள்

### திருக்குறளின் பெருமை

வள்ளுவர் தந்த திருமறையைத்—தமிழ்
மாதின் இனிய உயிர்நிலையை
உள்ளம் தெளிவுறப் போற்றுவமே—என்றும்
உத்தம ராகி ஒழுகுவமே. (1)

### கம்பர் கவிமாண்பு

பாவின் சுவைக்கடல் உண்டெழுந்து—கம்பன்
பாரிற் பொழிந்ததீம் பாற்கடலை
நாவின் இனிக்கப் பருகுவமே—நூலின்
நன்னயம் முற்றுந் தெளிகுவமே. (2)

### சிலப்பதிகாரச் சிறப்பு

தேனிலே ஊறிய செந்தமிழின்—சுவை
தேரும் சிலப்பதி காரமதை
ஊனிலே எம்முயிர் உள்ளளவும்—நிதம்
ஓதி யுணர்ந்தின் புறுவோமே. (3)

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

## ஆசிரியர் குறிப்பு

**தேசிக விநாயகம் பிள்ளை :** இவர் திருவாங்கூரையடுத்த தேரூரில் பிறந்தவர்; எளிய இனிய நடையில் கவிபாடும் திறம் படைத்தவர்; ஆசியஜோதி, உமர்கய்யாம், நாஞ்சில் நாட்டு மருமக்கள் மான்மியம் முதலிய பல நூல்களையும் தனிப்பாடல்களையும் எழுதியுள்ளார். இப்பகுதி மலரும் மாலையும் என்னும் தொகை நூலிலிருந்து எடுக்கப்பட்டதாகும்.

## அருஞ்சொல் விளக்கம்

**1.** மறை - வேதம், திருக்குறள்; தமிழ் மாது - தமிழ்த் தெய்வம்; உயர்நிலை - உயிர் தங்கியிருக்கும் இடம்; உத்தமர் - உயர்ந்தோர்.

**2.** பா - செய்யுள்; சுவை - இன்பம்; பார் - பூமி; தீம் - இனிய; நயம் - சிறப்பு, இனிமை.

**3.** தேரும் - ஆராய்ந்து அறியத்தக்க; ஊன் - உடல்.

## வினாக்கள்

1. தமிழ் மாதின் இனிய உயிர்நிலை என்று கூறப்படுவது யாது? எங்ஙனம்?
2. கம்பர் பாடல்கள் எங்ஙனம் சிறப்பிக்கப் பெற்றுள்ளன?
3. சிலப்பதிகாரத்தின் பெருமை யாது?

## பயிற்சி

**I. பிரித்து எழுதுக:—**தெளிவுற, பாற்கடல், நன்னயம், செந்தமிழ்.

**II. 1. நினைவில் கொள்க:—**ஓதி + உணர்ந்து: ஓதியுணர்ந்து. 'ய்' இடையே தோன்றியது. இ, ஈ, ஐ என்ற எழுத்துக்களை ஈற்றில் உடைய சொல்லுக்குமுன் உயிரை முதலாக உடைய சொல் வந்துசேரும் போது 'ய்' தோன்றும். மற்றைய உயிர் எழுத்துக்களுக்கு முன் உயிர் வரும்போது 'வ்' தோன்றும். 'ஏ' என்னும் எழுத்துக்களுக்கு முன் உயிர் வரும்பொழுது 'ய், வ்' என்ற எழுத்துக்கள் தோன்றும். இவ்விரண்டு எழுத்துக்களும் உடம்படு மெய் எனப்படும்.

| | | | | |
|---|---|---|---|---|
| (உ - ம்.) | மணி | + அடித்தான் | = | மணியடித்தான். |
| | தீ | + அணைந்தது | = | தீயணைந்தது. |
| | பனை | + ஓலை | = | பனையோலை. |
| | மா | + இலை | = | மாவிலை. |
| | தே | + ஆரம் | = | தேவாரம் |
| | அவனே | + அழகன் | = | அவனே யழகன் |

2. ன், ல் இவற்றை ஈற்றில் உடைய சொற்களுக்கு முன் வல்லினம் வந்தால் அவை 'ற்' ஆக மாறும்.

| | | | | |
|---|---|---|---|---|
| (உ - ம்.) | பொன் | + குடம் | = | பொற்குடம். |
| | கல் | + சிலை | = | கற்சிலை. |

3. ண், ள் இவற்றை ஈற்றில் உடைய சொற்களுக்கு முன் வல்லினம் வந்தால் அவை 'ட்' ஆக மாறும்.

| | | | | |
|---|---|---|---|---|
| (உ - ம்.) | மண் | + பாண்டம் | = | மட்பாண்டம். |
| | வாள் | + போர் | = | வாட்போர். |

4. அ, இ என்ற எழுத்துக்களை ஈற்றில் உடைய வினையெச்சங்களுக்கு முன்னும், இரண்டாம் வேற்றுமை உருபாகிய 'ஐ', நான்காம் வேற்றுமை உருபாகிய 'கு' இவற்றின் முன்னும் வன்றொடர்க் குற்றிய லுகரத்திற்கு முன்னும் க, ச, த, ப என்னும் வல்லெழுத்துக்களை முதலாக உடைய சொல் வந்தால் அவை மிகும்.

| | | | |
|---|---|---|---|
| தேட | + சென்றேன் | = | தேடச் சென்றேன். |
| ஓடி | + கண்டான் | = | ஓடிக் கண்டான். |
| அவனை | + பார்த்தான் | = | அவனைப் பார்த்தான். |
| இராமனுக்கு | + தந்தான் | = | இராமனுக்குத் தந்தான். |
| எழுத்து | + கலை | = | எழுத்துக் கலை. |

# VI. பல்சுவை

## சொல் நயம்

அஞ்சிலே ஒன்று பெற்றான் அஞ்சிலே ஒன்றைத் தாவி
அஞ்சிலே ஒன்று ஆருக ஆரியற் காக ஏகி
அஞ்சிலே ஒன்று பெற்ற அணங்கைக்கண் டயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்றை வைத்தான் அவன்நம்மை அளித்துக்
காப்பான். (1)

—கம்பர்

## சிலேடை

ஆவலுடன் பாவலரும் ஆறுகால் வண்டினமும்
காவலரைச் சூழும் கலைசையே—மேவும்
அரிவையம் பாகத்தான் அரனொருமூன் றெய்தோன்
அரிவையம் பாகத்தான் அகம். (2)

—தொட்டிக்கலை சுப்பிரமணிய தேசிகர்

## கற்பனை

தாழ்ந்தோர் உயர்வ ரென்றும்மிக
உயர்ந்தோர் தாழ்வ ரென்றுமறம்
சூழ்ந்தோர் உரைக்கும் உரைகண்டாம்
மதில்சூழ் கிடந்த தொல்லகழி
தாழ்ந்தோ ரனந்தன் மணிமுடிமேல்
நின்றன் றுயர்ந்து தடவரையைச்
சூழ்ந்தோர் வரையின் உதிப்பவன்தாட்
கீழ்நின் றதுபோய்ச் சூழெயிலே. (3)

—சிவப்பிரகாச சுவாமிகள்

## பழிப்பதுபோலப் புகழ்தல்

நாணென்றால் நஞ்சிருக்கும் நற்சாபம் கற்சாபம்
பாணந்தான் மண்தின்ற பாணமே—தாணுவே
சீராரூர் வாழும் சிவனேயஃ தெப்படிநீர்
நேராரூர் செற்ற நிலை. (4)

—காளமேகப் புலவர்

## நினைவும் முடிவும்

இருளும் அகலும் இரவியும் நீங்கும்;
பொருவில்இத் தாமரைப் பூவும் மலரும்
மலரும் பொழுதிவ் வன்சிறை நீங்கி,
உலகில் எங்கும் உலவித் திரிந்து,
பூவெழு பற்பல புதுவனம் கண்டு,
நாவெழு சுவைதரு நறைமிக உண்டு,
வாழ்குவன் என்றொரு மதுகரம் இருப்பத்
தாழ்மத வேழமொன் றூழ்கயம் இறங்கிப்
பாசிலைப் பூவெலாம் பறித்து
வீசி யெறிந்து வெறிகொண் டதுவே. (5)

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

## கடமையுணர்ச்சி

ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே;
சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே;
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே;
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே;
ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே. (6)

—பொன்முடியார்

## ஆசிரியர் குறிப்பு

**தொட்டிக்கலை சுப்பிரமணிய தேசிகர்:** இவர் தொட்டிக்கலை என்னும் ஊரில் பிறந்தவர்; கலைசைச் சிலேடை வெண்பா முதலிய பல நூல்களைப் பாடியவர். காலம்: 18-ஆம் நூற்றாண்டு.

**சிவப்பிரகாச சுவாமிகள்:** இவர் வீரசைவ மதத்தினர். காஞ்சிபுரத்தில் குமாரசுவாமி பண்டாரத்தின் புதல்வராகத் தோன்றினர். துறைமங்கலம் அண்ணாமலை ரெட்டியாரால் இவர் ஆதரிக்கப்பட்டார்; இலக்கண இலக்கியங்களில் வல்லவர்; நன்னெறி, பிரபுலிங்க லீலை முதலியன இவர் இயற்றியவை. காலம்: 17-ஆம் நூற்றாண்டு.

**காளமேகப் புலவர்:** வரதர் என்பது இவர் இயற்பெயராம். இவர் திருவானைக்காவில் வாழ்ந்தவர்; ஆசுகவி பாடுவதிலும் வசை பாடுவதிலும் நகைச்சுவை ததும்பப் பாடுவதிலும் வல்லவர். நீருண்ட கரிய மேகம்

போல் கவிமழை பொழியும் காரணத்தால் இவரைக் காளமேகம் என வழங்கினர். காலம் : 15-ஆம் நூற்ருண்டு.

பொன் முடியார் : சங்ககாலத்தில் வாழ்ந்த பெண்பாற் புலவர். இவர் பாடல் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது.

## அருஞ்சொற்பொருள்

1. அஞ்சிலே ஒன்று - இச்சொற்ருெடர் முறையே (1) வாயு (2) நீர், கடல் (3) ஆகாயம் (4) நிலம், (5) தீ ஆகியவற்றைக் குறிக்கும். அஞ்சிலே ஒன்று பெற்ருன் - அநுமன் ; ஆறு - வழி ; ஆரியன் - இராம பிரான் ; அஞ்சிலே ஒன்று பெற்ற அணங்கு - சீதை ; அயலார் - பகைவர்.

2. ஆவல் - விருப்பம் ; பாவலர் - புலவர் ; காவலர் - அரசர் ; கா அலர் - சோலேயில் உள்ள மலர் ; கலேசை - தொட்டிக்கலே என்னும் ஊர். அரி - திருமால் ; வை - கூர்மையான ; அம்பாக - கணேயாக (தொடுத்து) ; தான் - தானே ; அரிவை - பெண்ணுகிய பார்வதியை; அம் - அழகிய ; பாகத்தான் - இடப்பக்கத்தில் கொண்டவன் ; அரண் ஒரு மூன்று - தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன்மாலி என்ற மூன்று அரக்கர் களின் பொன், வெள்ளி, இரும்பிளுல் ஆய மூன்று கோட்டைகள் ; எய்தோன் - அம்பெய்து அழித்தவன்.

3. சூழ்ந்தோர் - ஆராய்ந்தவர் ; சூழ்கிடந்த - சுற்றியுள்ள ; தொல் அகழி : தொன்மை + அகழி ; அனந்தன் - ஆதிசேடன் ; தடவரை - பெரிய மேருமலே ; சூழ்ந்து - சுற்றிவந்து; ஓர்வரை - ஒருமலே, உதயகிரி; உதிப்பவன் - தோன்றுபவன், சூரியன் ; எயில் - மதில்.

4. நாண்-வில்லே வளேத்துக்கட்டும் கயிறு ; நஞ்சிருக்கும் - நைந்து இருக்கும், விஷமுடைய பாம்பாக இருக்கும் ; சாபம் - வில் ; கல் - மலே, மேரு ; மண்தின்ற பாணம் - செல்லரித்த அம்பு, மண்ணேத் தின்ற திரு மால் ; தாணு - அழியாப் பொருள் ; ஆரூர் - திருவாரூர் ; நேரார் - பகை வர் ; செற்ற - அழித்த ; சிவபெருமான் முப்புரம் எரித்தபொழுது மேரு மலேயை வில்லாகவும், ஆதிசேடனே நாணுகவும், திருமாலே அம்பாகவும் கொண்டு சென்ருர் என்பது வரலாறு.

5. இரவி - சூரியன் ; பொரு இல் - ஒப்பில்லாத ; வன்சிறை - கொடிய சிறை : பூ எழு - பூக்கள் மலர்ந்துள்ள ; நா எழு - நாவில் சுவை ஊறு கின்ற ; நறை - தேன் ; வாழ்குவன் - வாழ்ந்திருப்பேன் ; மதுகரம் - வண்டு ; வேழம் - யானே ; கயம் - குளம் ; பசுமை + இலே - பாசிலே ; வெறிகொண்டது - மதம் கொண்டது.

6. புறந்தருதல் - வளர்த்தல் ; தலேக்கடன் - முதற் கடமை ; சான் ருேன் - அறிவு ஒழுக்கங்கள் நிறைந்தவன் ; நல் நடை - நல்லொழுக்கம் ; வடித்து - கூர்மை செய்து ; ஒளிறு வாள் - ஒளி வீசுகின்ற வாளாயுதம் ; அருஞ் சமம் - கொடிய போர் ; முருக்கி - பகைவரை அழித்து ; களிறு - ஆண்யானே ; காளே - காளேயைப்போன்ற வீரன் ; உவமையாகு பெயர்.

## வினுக்கள்

1. அஞ்சிலே ஒன்று பெற்ருன் என்ற பாட்டில் அமைந்த சொல் நயத்தை விளக்குக.

2. காவலரைச் சூழும் கலேசையே—இத்தொடரில் அமைந்த சிலேடைப் பொருளே விளக்குக.

3. அரிவையம்பாகத்தான் அரணெரு மூன்றெய்தோன் அரிவையம்பாகத்தான் அகம்—பதவுரை எழுதுக.

4. மதிலும் அகழியும் விளக்கும் உண்மைகள் யாவை? எங்ஙனம்?

5. நேராரூர் செற்ற நிலே எப்படி?—இங்ஙனம் கூறக் காரணம் என்ன?

6. பாணம்தான் மண்தின்ற பாணமே—இதில் அமைந்த கதையை எழுதுக.

7. வண்டின் எண்ணம் யாது? அஃது எங்ஙனம் முடிந்தது?

8. இருளும் அகலும் என்று தொடங்கும் பாடலால் நீங்கள் அறியும் நீதி யாது?

9. பொன் முடியார் யார் யார்க்கு எவ்வெக்கடமைகள் உரியன என்று கூறுகின்ருர்?

## பயிற்சி

I. பிரித்து எழுதுக:—ஆருக, நேராரூர், தாட்கீழ், நற்சாபம், நன்னடை, அருஞ்சமம், பாசிலே.

II. சேர்த்து எழுதுக:—தொன்மை + அகழி, கல் + சாபம், என் + தலே, கா + அலர், பொரு + இல், பல + பல.

III. நினேவிற் கொள்க:—

(3) எயில் வரையின் உதிப்பவன் தாட்கீழ் நின்றது என்பது மதிலின் உயரத்தை அதிகப்படுத்திக் காட்டுகிறது. இவ்வாறு ஒன்றன் உயர்வை மிகுத்துச் சொல்வது உயர்வு நவிற்சி அணியாம்.

(2) காவலரைச் சூழும் கலேசையே என்பதில் காவலர் என்பது, அரசர் என்றும் (கா + அலர்) சோலேயில் உள்ள மலர் என்றும் இரு பொருள் தருகின்றது. இவ்வாறு ஒரு சொல் இரு பொருள்பட வருவது சிலேடை அணியாம்.

IV. (1) தொல்லகழி தாழ்ந்தோர் அனந்தன் மணிமுடிமேல் நின்றன்று, (2) பாணம்தான் மண்தின்ற பாணம், (3) நாணென்ருல் நஞ்சிருக்கும்—இவற்றில் உள்ள அணிகளேக் குறிக்க.

---

# MOOVAR TAMIL VACHAKAM

**BOOK III FOR FORM III**

SPECIAL COURSE

BY

Vidwan G. VILVAPATHY

Vidwan M. S. VENKATACHARI

&

T. R. SRINIVASAN, B.A., B.T.

***Price: As. 14/-***

---

*Copies can be had at :*

54, SWAMI NAICKEN STREET

CHINTADRIPET, MADRAS - 2